# வைதிக தர்ம வர்த்தனீ



மலர் 12
இதழ் 11

விகாரிஹூ
ஆவணிமீ

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

## தர்ம சாஸ்த்ரச் சுருக்கம்.

கீழவிடையல் ஸ்ரீ ஆர். முத்துசாமி அய்யர் 1917-ம் வருஷத்தில் இயற்றியதின் **நான்காம் பதிப்பு.**

ப்ராஹ்மணர்களின் **கர்மானுஷ்டானங்களை** விவரிக்கும் **வைத்யநாத தீக்ஷிதீயம்** என்ற தர்ம சாஸ்த்ரத்தின் **ஆறு காண்டங்களையும்** ஸங்க்ரஹமாய் தமிழில் வெளியிடப்பட்டது. **விலை ரூ. 3-00,** முன்பணம் ரூ. 3-82 }
வி. பி. யில் ரூ. 4-00 }

**கிடைக்குமிடங்கள் :** **கே. எம். நாகராஜ அய்யர்**
கீழவிடையல், கருப்பூர்-குடவாசல் P.O. (தஞ்சைஜில்லா)

கிரி டிரேடிங் ஏஜன்ஸி, Religious Book Sellers & Publishers (Near Mathunga Ry. Station,) Bombay-19.

S. V. V. தீக்ஷிதர், 25. C, வடக்கு மாடவீதி, மைலாப்பூர்.

P. B. பஞ்சாக்ஷரகுருக்கள், 23/1, அய்யனர் கோயில்ரோடு, Vannar Ponnai, Jafna, CEYLON.

| தமி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ப்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | திங். ○ | சசி. | 34-35 | சிர. | 54-50 | அ.சி. | — |
| 2 | 18 | செவ். | பௌ. | 30-47 | அவி. | 53-25 | சி. ம. | — |
| 3 | 19 | புதன் | ப்ர. | 28-22 | சத. | 53-22 | சி.அ. | ப்ர. |
| 4 | 20 | வியா. | த்வி. | 27-25 | பூரட். | 54-53 | சி. | த்வி. |
| 5 | 21 | வெள். | த்ரி. | 28-10 | உத்தி. | 58-05 | சி. | த்ரி. |
| 6 | (ஆகஸ்டு மீ) 22 | சனி | சது. | 30-38 | ரேவ. | 60-00 | — | சது. |
| 7 | 23 | ஞா. | பஞ். | 34-38 | ,, | 2-53 | அ.சி. | பஞ். |
| 8 | 24 | திங். | ஷஷ். | 39-50 | அசு. | 9-00 | சி. | ஷஷ் |
| 9 | 25 | செவ். | ஸப். | 45-45 | பர. | 16-05 | சி. | ஸப். |
| 10 | 26 | புத. | அஷ். | 51-48 | க்ருத். | 23-30 | அ.சி. | அஷ் |
| 11 | 27 | வியா. | நவ. | 57-25 | ரோ. | 30-45 | உ. ம. | நவ. |
| 12 | 28 | வெ. | தச. | 60-00 | மிருக. | 37-18 | சி. | தச. |
| 13 | 29 | சனி | ,, | 2-05 | திரு | 42-38 | சி. | ஏகா. |
| 14 | (1950௵) 30 | ஞா. | ஏகா. | 5-25 | புன. | 46-33 | சி. | த்வா. |
| 15 | 31 | திங். | த்வா. | 7-10 | பூச. | 48-55 | சி. | த்ர. |
| 16 | 1 | செவ் | த்ர. | 7-23 | ஆயி. | 49-48 | சி. | சசி. |
| 17 | 2 | புதன் ● | சசி. | 6-05 | மக. | 49-18 | சி.அ. | அமா |
| 18 | 3 | வியா. | அமா<br>ப்ர. | 3-28<br>59-45 | பூர. | 47-38 | சி. ம. | ப்ர. |
| 19 | 4 | வெள். | த்வி. | 59-08 | உத். | 45-03 | சி.அ. | த்வி. |
| 20 | 5 | சனி | த்ரி. | 49-55 | ஹஸ். | 41-48 | ம. | த்ரி. |
| 21 | 6 | ஞா. | சது. | 44-15 | சித். | 38-08 | சி. | சது. |
| 22 | (செப்டம்பர் மீ) 7 | திங். | பஞ். | 38-25 | சுவா. | 34-13 | அ.ம. | பஞ். |
| 23 | 8 | செவ். | ஷஷ். | 32-30 | விசா. | 30-15 | ம. சி. | ஷஷ் |
| 24 | 9 | புதன் | ஸப். | 26-45 | அனு. | 26-22 | சி. | ஸப். |
| 25 | 10 | வியா | அஷ் | 21-12 | கேட். | 22-47 | சி. | அ. ந. |
| 26 | 11 | வெள். | நவ. | 16-05 | மூல. | 19-32 | அ. | தச. |
| 27 | 12 | சனி | தசமி | 11-27 | பூரா | 16-50 | சி. | ஏகா. |
| 28 | 13 | ஞா. | ஏகா. | 7-27 | உத்தி. | 14-45 | அ. | த்வா. |
| 29 | 14 | திங். | த்வா. | 4-15 | சிர. | 13-30 | அ சி. | த்ர. |
| 30 | 15 | செவ். | த்ர. | 2-00 | அவி. | 13-10 | சி. ம. | சசி. |
| 31 | 16 | புத. ○ | சசி. | 0-47 | சத. | 13-55 | சி அ. | பௌ |

15, 29வ ப்ர. 2வ யஜுர் உபாகர்மம், 3வ காயத்ரீ ஜபம். 9வ இரு. 10வ கோகுலாஷ்டமி. 13, 27வ ஏ. 17வ அமா. 21வ் வி. சதுர்த்தி.

**நம்பத்ரிகையை போற்றி பலகடிதங்கள் வருகின்றன.**

# வைதிக தர்ம வர்த்தனீ.



விகாரிஹூ ஆவணிமீ

மலர் 12] [இதழ் 11.

தனிப்ரதி அணா 7.

வருஷசந்தா ரூ. 5

கார்யாலயம்: கடவாசல்,

வடகால் P.O. (Via.) சீர்காழி.

(தஞ்சை ஜில்லா.)


## பொருளடக்கம்.



## நவரஸப் பகுதி.

(கௌண்டின்யன்)

**மனிதர்க்கு வேண்டாம்:** ஸ்த்ரீ புருஷ ஸம்மந்தமின்றி கர்ப்பாதானத்திற்கு ஊசி குத்துதல் மூலம் ஏற்பாடு செய்யப்படுகிறது. இங்ஙனம் விக்ஞான சாஸ்த்ர ஆராய்ச்சியால் மிருகங்களுக்கு செயற்கை கர்ப்பம் நடக்கின்றது. பிரும்மா ஸதிபதிகளின் ஆநந்த முடிச்சைப் புத்ரனாகப் படைக்கிறார். கேவல மிருகங்களுடன் இந்த விச்வாமித்ர ஸ்ருஷ்டியை நிறுத்துவரா? மஹர்ஷிகள் ரத்த ஸம்மந்தமுள்ள புநித பாரத மக்களுக்கு இது வேண்டாம்! வேண்டாம்!! பிறபீஜஸம்மந்தம்!!!

**கல்வி போதா, ஆசாரம் வேண்டும்:** இரு புலவர் வெளியூர் சென்றார்கள். ஒருவர் தன்னுடன்வருபவருக்கு அளிக்காமல் தான்கொண்டுவந்த உணவை உண்ண ஆரம்பித்தார். முதற் புலவர்: மருந்தாயினும் விருந்திட்டே உண்க என்ற கருத்துள்ள பாடல் கூறினார். இரண்டாம் புலவர் சிறிய இலைக்கிழிசலில் இரண்டு பருக்கையை வைத்து, தினை அளவாயினும் மலையளவாகக் கருதுவர் பெரியார் என்றார்.

லோபியான க்ருஹஸ்தனிடம் ஒரு அதிதி வந்து உணவு கேட்டார். ஸ்நாநம் செய்யாமல் உண்டது மலத்தைப் புசிப்பதாகும் என்றார். அதிதி: கோவிந்த என்று கூறி, கோவிந்தேதி ஸதா ஸ்நாநம் என்றார். க்ருஹஸ்தர்: ராமாம்ருதம் ஜீவநம் ராம என்றார். அநுஷ்டாந மிருந்தாலல்லது சாஸ்திரக் கல்வி பயனில்லை.

**இப்போதும் கண்ணாடியுடன் தான் பார்க்கிறாய்:** வாநகரில் ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஒரு பத்ரிகையில் வந்த ச்ருங்கேரி ஜகத்குருவின் படத்தைக் காட்டி, இது யார் தெரிகிறதா? என்றார்கள். சிஷ்யன் தெரியவில்லை என்ற போது, யார் என ஸ்ரீ ஆசார்யாள் கூற, மூக்குக்கண்ணாடி அணிந்த அவர்களைப் பார்த்ததுண்டு; இதில் கண்ணாடியில்லாததால் தெரியவில்லை எனக் கூறிய சிஷ்யன் கண்ணாடி அணிந்து இருந்ததால், இப்போதும் கண்ணாடியுடன்தான் பார்க்கிறாய்என மிகரஸமாகக் கூறினார்கள். உனக்கு கண்ணாடி யிருந்தும் கண்ணாடியில்லாமலிருப்பதால் ஒருவரை உனக்கு அறிய ஸாமர்த்ய மில்லையே என்று த்வநி.

# ஆச்வலாயநீய ஸந்த்யாவந்தனம்.

(ஆடிமீ தொடர்ச்சி.)

आदित्यं तर्पयामि, सोमं तर्पयामि, अङ्गारकं तर्पयामि, बुधं तर्पयामि, बृहस्पतिं तर्पयामि, शुक्रं तर्पयामि, शनैश्चरं तर्पयामि, राहुं तर्पयामि, केतुं तर्पयामि ॥

केशवं तर्पयामि, नारायणं तर्पयामि, माधवं तर्पयामि, गोविन्दं तर्पयामि, विष्णुं तर्पयामि, मधुसूदनं तर्पयामि, त्रिविक्रमं तर्पयामि, वामनं तर्पयामि, श्रीधरं तर्पयामि, हृषीकेशं तर्पयामि, पद्मनाभं तर्पयामि, दामोदरं तर्पयामि ॥

ஆதி[3]த்யம் தர்ப்பபாமி, ஸோமம் தர்ப்பயாமி, அங்காரகம் தர்ப்பயாமி, பு[3]த[4]ம் தர்ப்பயாமி, ப்[3]ருஹஸ்பதிம் தர்ப்பயாமி, ஶுக்ரம் தர்ப்பயாமி, ஶனைஶ்சரம் தர்ப்பயாமி, ராகும் தர்ப்பயாமி, கேதும் தர்ப்பயாமி ॥

கேஶவம் தர்ப்பயாமி, நாராயணம் தர்ப்பயாமி, மாதவம் தர்ப்பயாமி, கோ[3]விந்த[3]ம் தர்ப்பயாமி, விஷ்ணும் தர்ப்பயாமி. மது[4]ஸூத[3]னம் தர்ப்பயாமி, த்ரிவிக்ரமம் தர்ப்பயாமி, வாமனம் தர்ப்பயாமி, ஶ்ரீதரம் தர்ப்பயாமி, ஹ்ருஷீகேஶம் தர்ப்பயாமி, பத்[3]மநாப[4]ம் தர்ப்பயாமி, தா[3]மோத[3]ரம் தர்ப்பயாமி ॥ என ஆதித்யன் முதலியவர்களைக்குறித்து தர்ப்பணம்செய்தபின் ஆசமனம் செய்யவும்.

---

## காயத்ரீ ஜப விதி.

शुक्लाम्बरधरं विष्णुं.........सर्वविघ्नोप शान्तये ॥

ஶுக்லாம் பரதரம் விஷ்ணும் ....ஶாந்தயே ॥

ओं भूः ......सुवरोम् ॥ ஓம் பூ:........ஸுவரோம் ॥ என ப்ராணாயாமம் செய்து ஸங்கல்பம் செய்யவேண்டியது.

---

இதற்கு அன்னதானம் செய்பவர் சந்தாதாரர்களே.

**ममोपात्त समस्त दुरित क्षयद्वारा श्रीपरमेश्वर प्रीत्यर्थं प्रातस्सन्ध्या गायत्री महामन्त्रजपं करिष्ये ॥ माध्यान्हिक गायत्री महामन्त्र जपं करिष्ये । सायं सन्ध्या गायत्री महामन्त्र जपं करिष्ये ॥**

மமோபாத்த ஸமஸ்தது3ரித க்ஷயத்3வாரா ஸ்ரீ பரமேஸ்வர ப்ரீத்யர்த2ம் ப்ராதஸ் ஸந்த்4யா கா3யத்ரீ மஹாமந்த்ர ஜபம்கரிஷ்யே ॥ (எனக் காலையிலும்) மாத்4யான்ஹிக கா3யத்ரீ மஹாமந்த்ர ஜபம் கரிஷ்யே ॥ (என உச்சி வேளையிலும்) ஸாயம் ஸந்த்4யாகா3யத்ரீ மஹாமந்த்ர ஜபம் கரிஷ்யே । (என மாலையிலும்)

**प्रणवस्य ऋषिर्ब्रह्मा । देवी गायत्रीछन्दः । परमात्मा देवता ॥**

**भूरादिसप्त व्याहृतीनां अत्रि भृगु कुत्स वसिष्ठ गौतम काश्यपाङ्गिरस ऋषयः । गायत्र्युष्णि गनुष्टुप्बृहतीपङ्क्ति त्रिष्टुब्जगत्यश्छन्दांसि ॥**

**अग्निवाय्वर्क वागीश वरुणेन्द्र विश्वदेवा देवताः ॥**

ப்ரணவஸ்ய ரிஷிர்ப்ரஹ்மா । என ஶிரஸிலும், தே3வீ கா3யத்ரீசந்த:3 । என நாசியையும். பரமாத்மா தே3வதா என மார்பையும், பூ4ராதி3ஸப்த வ்யாஹ்ருதிஹும் அத்ரிப்3ருகு3குத்ஸ வஸிஷ்ட2 கௌதம காஶ்யப ஆங்கிரஸ ரிஷய: என சிரஸ்ஸையும், கா3யத்ரீ உஷ்ணிக் அனுஷ்டுப் ப்ருஹதி பங்க்தீ த்ருஷ்டுப் ·ஜக3த்ய: ச2ந்தா3ம்ஸி - என நாசியையும், அக்2னிவாய் வர்க வாகீ3ஶ வருணேந்த்3ர விஶ்வதே3வா தே3வதா: ॥ அதன் பின்பு: பத்து முறை ப்ராணாயாமம் செய்யவும் ॥

**आयात्वित्यनुवाकस्य वामदेव ऋषिः । अनुष्टुप्छन्दः । गायत्रीदेवता । गायत्रीयावाहने विनियोगः ॥**

ஆயாத்வித்யனுவாகஸ்ய வாமதே3வரிஷி: । அனுஷ்டுப் சந்த: । கா3யத்ரீ தே3வதா । கா3யத்ரீயாவாஹனே விநியோக: ॥

---

आयातु वरदादेवी अक्षरं ब्रह्मसम्मितम्। गायत्री छन्दसाम् मातेदं ब्रह्मजुषस्वनः ॥ ओजोसि सहोऽसि बलमसि भ्राजोऽसि देव। नां धामनामासि विश्वमसि विश्वायुस्सर्वमसि सर्वायुरमिभूरों गायत्रीम् आवाहयामि। सावित्रीम् आवाहयामि। सरस्वतीम् आवाहयामि।

सावित्र्याः ऋषिः विश्वामित्रः। निचृद्गायत्रीछन्दः। सविता देवता जपे विनियोगः ॥

ஆயாதுவரதா3தே3வீ அக்ஷரம் ப்3ரஹ்மஸம்மிதம்। கா3யத்ரீம் ச2ந்த3ஸாம் மாதேத3ம் ப்3ரஹ்மஜுஷஸ்வந:। ஓஜோஸி ஸஹோஸிப3லமஸி ப்4ராஜோஸி தே3வாநாம் தா4மநாமாஸி। விஸ்வமஸி விஸ்வாயு: ஸர்வமஸி ஸர்வாயுரபி4பூ4ரோம் கா2யத்ரீம் ஆவாஹயாமி। ஸாவித்ரீம் ஆவாஹயாமி। ஸரஸ்வதீம் ஆவாஹயாமி ॥ ஸாவித்ர்யா: ரிஷி: விஸ்வாமித்ர:। நிச்ருத்கா3யத்ரீ ச2ந்த3:। ஸவிதா தே3வதா ॥ ஜபே விநியோக3: ॥

ओं भूः अङ्गुष्ठाभ्यां नमः ओं भुवः तर्जनीभ्यां नमः ओं स्वः मध्यमाभ्यां नमः ओं तत्सवितुर्वरेण्यं अनामिकाभ्यां नमः ओं भर्गो देवस्यधीमहि कनिष्ठिकाभ्यां नमः ओं धियोयोनः प्रचोदयात् करतल करपृष्ठाभ्यां नमः ॥

ओं भूः हृदयाय नमः ओं भुवः शिरसे स्वाहा ओं स्वः शिखायै वषट् ओं तत्सवितुर्वरेण्यं कवचायहुं ओं भर्गो देवस्य धीमहि नेत्रत्रयाय वौषट् ओं धियोयोनः प्रचोदयात् अस्त्राय फट् भूर्भुवः स्वरोमिति दिग्बन्धः ॥

ஓம் பூ:4—அங்கு3ஷ்டா2ப்யாம் நம:, ஓம் புவ:—தர்ஜனீப்4யாம் நம:, ஓம் ஸ்வ:—மத்4யமாப்4யாம் நம:, ஓம் தத்ஸ விதுர்வரேண்யம்—அனாமிகாப்4யாம் நம:, ஓம் பர்கோ தேவஸ்ய தீமஹி-கனிஷ்டிகாப்4யாம் நம:,தி3யோ யோந: ப்ரசோதயாத்-கரதலகரப்ருஷ்டா2ப்யாம் நம: ॥

---

ஓம் பூ:-ஹ்ருதயாய நம:, ஓம் புவ:-ஶிரஸேஸ்வாஹா ஓம் ஸ்வ: ஶிகாயை வஷட், ஓம் தத்ஸவிதுர் வரேண்யம்-கவசாய ஹூம், ஓம் ப⁴ர்கோ² தேவஸ்ய தீ⁴மஹி - நேத்ர த்ரயாய வௌஷட், ஓம் தி⁴யோ யோந: ப்ரசோத³யாத்-அஸ்த்ராய ப²ட், பூ⁴ர்புவஸ்வரோமிதி திக்³பந்த:⁴ ॥

**ध्यानम् ॥ मुक्ताविद्रुम हेमनील धवळच्छायै र्मुखैस्त्रीक्षणै र्युक्ता मिन्दुकला निबद्धमकुटां तत्वार्थ वर्णात्मिकां। गायत्रीं वरदाभयाङ्कुश कशाश्शुभ्रं कपालं गुणं शङ्खं चक्रमथारविन्दयुगळं हस्तैर्वहन्तीं भजे ॥**

**(अष्टोत्तरशतवारं गायत्रीं जप्त्वा। पूर्ववत् हृदयादिन्यासं दिग्विमोकं ध्यानं प्राणायामं च कृत्वा) उपस्थानं करिष्ये ॥**

**த்யானம்.**

முக்தாவித்³ரும ஹேமநீலதவளச்சாயைர் முகைஸ்த்ரீக்ஷணைர் யுக்தாமிந்து³ கலாநிப³த்த⁴ மகுடாம் தத்வார்த² வர்ணாத்மிகாம்। கா³யத்ரீம் வரதா³ப⁴யாங் குஶகஶா: ஶுப்⁴ரம்கபாலம் கு³ணம் ஶங்க²ம் சக்ரமதா²ர விந்த³யுக³ளம் ஹஸ்தைர்வஹந்தீம்ப⁴ஜே ॥ என த்யானித்து

**ओं। भूर्भुवस्सुवः। तत्सवितुर्वरेण्यम्। भर्गो देवस्य धीमहि। धियो यो नः प्रचोदयात् ॥**

**ஓம்। பூ⁴ர்பு⁴வஸ்ஸுவ: । தத்ஸவிதுர்வரேண்யம் । ப⁴ர்கோ தே³வஸ்ய தீ⁴மஹி । தி⁴யோயோந: ப்ரசோத³யாத் ॥**

என (காலையில் 108 முறையும், நடுப்பகலில 32, சாயங்காலத்தில் 64 முறையும் காயத்ரியை ஜபிக்க வேண்டும்) ஜபமானபின்பு முன்போல் ஹ்ருத³யாய நம: எனபது முதல் அஸ்த்ராயபட் வரை சொல்லி ஓம் பூர்பு⁴வஸ் ஸுவரோமிதி திக்விமோக: என்றும் த்யானஶ்லோகத்தையும் கூறி ப்ராணாயாமம் செய்து உபஸ்தானம் கரிஷ்யே.

---

***12 வது அப்தபூர்த்திக்கு இன்னும் சில நாட்களே பாக்கி***

उत्तम इत्यनुवाकस्य वामदेवऋषिः। अनुष्टुप्छन्दः। गायत्री देवता। उपस्थाने विनियोगः॥ ओं उत्तमे शिखरे देवीभूम्यां पर्वत मूर्धनि। ब्राह्मणेभ्यो ऽभ्यनुज्ञानं गच्छदेवि यथासुखम्।

मित्रस्यत्यादित्र्यृचस्य विश्वामित्र ऋषिः। आद्या गायत्री। द्वेत्रिष्टुभौ। मित्रो देवता। उपस्थाने विनियोगः॥

உத்தம இத்யனுவாகஸ்ய வாமதே3வ ரிஷி: | அனுஷ்டுப்சந்த: கா3யத்ரீ தே3வதா உபஸ்தா2னே விநியோக:3 || ஓம் உத்தமே ஶிக2ரே தே3வீ பூ4ம்யாம் பர்வதமூர்த4னி | ப்ராஹ்மணேப்4யோப்4யனுக்ஞானம் க3ச்ச3 தே3வியதா2 ஸுக2ம் | மித்ரஸ்யேத்யாதித்ய ருசஸ்ய விஶ்வாமித்ர ரிஷி: | ஆத்3யா கா3யத்ரீ | த்வேத்ரிஷ்டுபௌ4 | மித்ரோ தே3வதா | உபஸ்தா2னே விநியோக:3 ||

ओं मित्रस्य चर्षणी धृतोऽवो देवस्यसानसि। द्युम्नं चित्रश्रवस्तमम्।
मित्रो जनान्यातयतिब्रुवाणो मित्रोदाधार पृथिवीमुतद्याम्।
मित्रः कृष्टीरनिमिषाऽभि चष्टे मित्रायहव्यं घृतवज्जुहोत।
प्रसमित्र मर्तो अस्तु प्रयस्वान्यस्त आदित्य शिक्षति व्रतेन।
नहन्यते नजीयते त्वोतो नैन मंहो अश्नोत्यन्तितोन दूरात्॥

ஓம் மித்ரஸ்ய சர்ஷணீத்4ருதோ3வோ தே3வஸ்ய ஸாநஸி | த்3யும்நம் சித்ரஶ்ரவஸ்த4மம் | மித்ரோஜனான் யாதயதிப்3ருவாணோ மித்ரோதா3தாரப்ருதி2வீமுதத்யா4ம் | மித்ர: க்ருஷ்டீரனிமிஷாபிசஷ்டே மித்ராய ஹவ்யம் க்4ருதவஜ்ஜுஹோத | ப்ரஸமித்ர மர்தோ அஸ்துப்ரயஸ்வான் யஸ்த ஆதி3த்ய ஶிக்ஷதிவ்ரதேன | நஹன்யதே நஜீயதே த்வோதோநைநமம்ஹோ அஶ்னோத் யந்திதோ நதூ3ராத் ||

जातवेदस इत्यस्य मन्त्रस्य कश्यपऋषिः। त्रिष्टुप्छन्दः। दुर्गा देवता।
उपस्थाने विनियोगः॥

ஜாதவேதஸ இத்யஸ்ய மந்த்ரஸ்ய கஶ்யபரிஷி: | எனத் தலையையும், த்ருஷ்டுப்ச2ந்த:3 | என நாசியையும,

---

புரட்டாசியுடன் பெரும்பாலரது சந்தா முடிகிறது.

து[3]ர்கா[3] தே[3]வதா என மார்பையும் தொடவேண்டியது. உபஸ்தா[2]னேவிநியோக:[3] ॥

**जातवेदसे सुनवाम सोम मरातीयतो निदहातिवेदः ।**
**सनः पर्ष दति दुर्गाणि विश्वा नावेव सिन्धुन्दुरितात्यग्निः ॥**

ஜாதவேத[3]ஸே ஸுநவாம ஸோம மராதீயதோ நித[3]ஹாதி வேத:[3] । ஸந: பர்ஷத[3]தி து[3]ர்காணி விஶ்வாநாவே வஸிந்து[4]ந்து[3]ரிதாத் யக்னி: ॥

**पिशङ्गभृष्टिमभृणं पिशाचि मिन्द्र सम्मृण । सर्वं रक्षो निबर्हय ॥**
**( इति मन्त्रेण अनामिकया अङ्गुल्यामुखं प्रदक्षिणं वेष्टयेत् ॥ )**

பிஶங்க[4] ப்ருஷ்டிமம் ப்[4]ருணம்பிஶாசி மிந்த்[3]ரஸம் ம்ருண । ஸர்வம் ரக்ஷோநிப[3]ர்ஹய ॥ (பவித்ர விரலால் முகத்தைச் சுற்றவேண்டியது.)

**भद्रं कर्णेभिश्शृणुयाम देवाः भद्रं पश्येमाक्षभिर्यजत्राः ।**
**स्थिरैरङ्गैस्तुष्टवां सस्तनूभिर्व्यशेम देवहितं यदायुः ॥**
**(इति मन्त्रेण कनिष्ठिकाङ्गुल्याकर्णं वेष्टयेत् )**

ப[4]த்[3]ரம் கர்ணேபிஶ் ஶ்ருணுயாமதே[3]வா: ப்[4]த்ர[3]ம் பஶ்யேமாக்ஷபி[4]ர் யஜத்[3]ரா: । ஸ்தி[2]ரை ரங்கைஸ்துஷ்ட் வாம் ஸஸ்தனூபிர்வ் யஶேமதே வஹிதம் யதா[3]யு: । (இத னல் சுண்டுவிரலால் காதைச் சுற்றிக்கொள்ளவும்.)

**केश्या अग्निं के शीविषं केशीबिभर्ति रोदसी ।**
**के शी विश्वं स्वर्दशे के शीदं ज्योतिरुच्यते ॥**
**(इति अङ्गुष्ठाङ्गुल्या शिखां वेष्टयेत् )**

கேஶ்யா அக்[3]னிம் கேஶீவிஷம் கேஶீ பி[3]ப[4]ர்தி ரோத[3]ஸீ । கேஶீவிஶ்வம் ஸ்வர்த்[3]ருஸேகேஶீதம் ஜ்யோதி ருச்யதே ॥ (என்று கட்டை விரலால் சிகையைச் சுற்ற வேண்டும்.)

நடுப்பகலில்—உபஸ்தானம் கரிஷ்யே ॥

**उत्तमे शिखरे देवी भूम्यां पर्वत मूर्धिनि । ब्राह्मणेभ्योऽभ्यनुज्ञानं गच्छदेवि यथासुखम् ॥**

---

பேப்பர் விலை ஏற்றம் நம்மால் சமாளிக்க முடியவில்லை.

உத்தமே ஶிக2ரேதே3வீ பூ4ம்யாம் பர்வத மூர்த4நி ।
ப்3ராஹ்மணேப்4 யோऽப்யனுக்ஞானம் க3ச்சதே3வி யதா2 ஸுக2ம் ॥

उदुत्यं जातवेदस मितित्रयोदशर्चस्य सूक्तस्य कण्वपुत्रा प्रस्कण्वऋषिः । नवाद्या गायत्र्यः । चतस्रोऽनुष्टुभः । सूर्यो देवता । उपस्थाने विनियोगः ।

உது3த்யம் ஜாதவேத3ஸ மிதித்ர யோத3 ஶர்சஸ்ய ஸூக்தஸ்ய கண்வபுத்ர: ப்ரஸ் கண்வரிஷி: । நவாத்3யா கா3யத்ர்ய: । சதஸ்ரோऽனுஷ்டுப:4 । ஸூர்யோ தே3வதா । உபஸ்தா2னே விநியோக: ॥

उद्यन्नद्येतित्यृचः रोगघ्नः । अन्त्यमर्धर्चं उपनिषत् । उपस्थाने विनियोगः उदुत्यञ्जातवेदसं देवं वहन्ति केतवः । दृशे विश्वाय सूर्यम् । अपत्येतायवो यथा नक्षत्रा यन्त्यक्तुभिः । सूराय विश्व चक्षसे ॥ अदृश्रमस्य केतवो विरश्मयो जनां अनु । भ्राजन्तो अग्नयो यथा ॥ तरणि र्विश्वदर्शतो ज्योतिष्कृदसि सूर्य । विश्वमाभासि रोचनम् ॥ प्रत्यङ् देवानां विशः प्रत्यङ्ङुदेषि मानुषान् । प्रत्यङ्विश्वं स्वर्दृशे ॥ येनापावक चक्षसा भुरण्यंतं जनां अनु । त्वंवरुण पश्यसि । विद्यामेषि रजस्पृथ्वहा मिमानो अक्तुभिः । पश्यन्जन्मानि सूर्य । सप्तत्वा हरितो रथे वहन्ति देवसूर्य । शो चिष्केशं विचक्षण । अयुक्त सप्तशुन्ध्युवस्सूरो रथस्य नप्त्यः । ताभिर्याति स्वयुक्तिभिः ॥ उद्वयं तमसस्परि ज्योतिष्पश्यन्त उत्तरम् । देवन्देव त्रासूर्य मगन्म ज्योतिरुत्तमम् ॥

உத்3யந்நத்3 யேதித்ய்ருச: ரோக3க்4ன: । அந்த்ய மர்த4ர்சம் உபனிஷத் । உபஸ்தா2னே வினியோக:3 ॥

உது3த்யம் ஜாதவேத3ஸம் தே3வம்வஹந்தி கேதவ: । த்ரு3ஶே விஶ்வாய ஸூர்யம் அபத்யே தாயவோ யதா2 நக்ஷத்ராயன் த்யக்துபி:4 । ஸூராய விஶ்வசக்ஷஸே ॥

---

இதனுல் சில தேசீய பத்ரிகைகளே நின்று விட்டன.

அத்3ருஸ்ரமஸ்ய கேதவோ விரஸ்மயோ ஜனும் அனு | ப்4ராஜந்தோ அக்3னயோ யதா2 || தரணிர் விஸ்வத3ர்ஸ தோ ஜ்யோதிஷ் க்ருத3ஸி ஸூர்ய | விஸ்வ மாபா4ஸிரோ சனம் ||

ப்ரத்யங் தே3வானும் விஸ: ப்ரத்யங்ஙுதே4ஷி மானு ஷான் | ப்ரத்யங் விஸ்வம் ஸ்வர்த்3ருஸே ||

யேனா பாவக சக்ஷஸா பு4ரண்யம் தம்ஜனும் அனு ! த்வம் வருண பஸ்யஸி | வித்3யாமேஷி ரஜஸ் ப்ருத்வ ஹாமி மாஞே அக்துபி4: | பஸ்யன் ஜன்மானி ஸூர்ய | ஸப்தத்வாஹரிதோரதே2 வஹந்திதே3வ ஸூர்ய | ஸோ சிஷ்கேஸம் விசக்ஷண | அயுக்தஸப்த ஸுந்த்யுவ: ஸூரோ ரதஸ்யநப்த்ர்ய: | தாபி4ர்யாதிஸ்வ யுக்திபி4: | உத்3வயம் தமஸஸ்பரி ஜ்யோதிஷ் பஸ்யந்த உத்தரம் | தே3வந் தே3வ த்ரா ஸூர்ய மக3ன்ம ஜ்யோதிருத்தமம் ||

**उद्यन्नद्यमित्रमह आरोहन्नुत्तरान्दिवम् । हृद्रोगं मम सूर्य हरिमाणञ्च नाशय ॥ शुकेषु मे हरिमाणं रोपणाकासु दध्मसि । अथोहारिद्र वेषुमे हरिमाणं निदध्मसि ॥ उदगादयमादित्यो विश्वेन सहसा सह । द्विषन्तं मह्यं रन्धयन्मो अहं द्विषतेरधम् ॥**

உத்3யன்னத்3ய மித்ரமஹ ஆரோஹன்னுத் தராந்தி3 வம் | ஹ்ருத்3ரோக3ம் மமஸூர்ய ஹரிமாணஞ்ச நாஸய | ஸுகேஷு மே ஹரிமாணம் ரோபணா காஸு த3த்4மஸி | அதோ2 ஹாரித்3ர வேஷுமே ஹரிமாணம் நித3த்4மஸி || உத3க3ாத3ய மாதி3த்யோ விஸ்வேன ஸஹஸாஸஹ | த்3வி ஷந்தம் மஹ்யம் ரந்த4யன்மோ அஹம்த்3விஷதேரத4ம் ||

**चित्रन्देवानामिति सूक्तस्य आङ्गिरस पुत्रः कुत्स ऋषिः । त्रिष्टुप्छन्दः । सूर्योदेवता ॥ सूर्योपस्थाने विनियोगः ॥**

சித்ரந்தே4வாநாமிதி ஸூக்தஸ்ய ஆங்கிரஸ புத்ர: குத்ஸரிஷி: | த்ரிஷ்டுப்ச2ந்த:3 | ஸூர்யோ தே3வதா || ஸூர்யோபஸ்தா2னே விநியோக:3 ||

---

தியாகோபநிஷத்.

# பக்தி பரீக்ஷை.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ணசாஸ்த்ரி.

"'பக்த விஜயம்' படித்திருக்கிறீர்களா" என்றார் நண்பர். "ஏதோ கொஞ்சம் தெரியும்" என்றேன். என் நண்பர் ஆரம்பித்தார்.

"அதில் ஒரு ஸ்வாரஸ்யம் பாருங்கள். எல்லா கதைகளும் ஒரே மாதிரியாகவே இருக்கின்றன. வருகிறகஷ்டம், சோதனைகள் எல்லாம் பக்தனுக்கே. ஆனால் கடைசியில் பகவான் அருளால் எல்லாம் நன்மையாகவே முடிகிறது. ஏன் ஐயா! இந்த பகவான் பக்தனைக் கஷ்டப்படுத்தாமல் காப்பாற்ற முடியாதா?"

"கஷ்டம் இருந்தால் தானே காப்பாற்ற முடியும் அய்யா. வியாதியிருந்தால் தானே வைத்தியமும் வேண்டும்."

"சரி, அப்பொழுது பகவான் கஷ்டங்களை பக்தனுக்கே ஏன் கொடுக்கவேண்டும். இந்த பக்தனை இம்ஸிக்கிறவன் கூட கஷ்டப்படாமல் கவலையற்றிருக்க, இவனுக்கு மாத்திரம் ஏன் இந்த மனக்கலக்கம்."

"படித்தவனுக்குத்தானே பரீக்ஷை. படிக்காதவனைப் பரீக்ஷைக்குப் பணம் கட்டக்கூட அனுமதிப்பதில்லையே." எப்பொழுது இவன் பகவானை நினைக்க ஆரம்பிக்கிறானோ, அப்பொழுதே அந்தக் கடவுளும் இவனை நினைக்க முற்படுகிறார். இவனிடத்திலே அவருக்குக் கருத்தும் கிருபையும் ஏற்பட்டு விட்டால், இவன் தன்னையன்றி வேறொன்றை நினையாதிருக்க பல சூழ் நிலையில் உள்ள அவனுக்கு பரீக்ஷைகள் வைத்துத் தன் அருளால் நீங்காத இன்பம் அளிக்கிறார்.

இதனால் பக்தன் கலங்குகிறதில்லை. அவன் கதறுவது ஆண்டவன் அருள்பெறவே. மறுபக்கமுள்ள இந்த கீர்த்தனையைப் பார்ப்போம்.

---

ராகம்: மார்க்க ஹிந்தோளம்] பல்லவி. [தாளம் - ஆதி.

த்ஸல மேலரா ஸாகேத ராம (த்ஸல)

அநுபல்லவி.

வலசி பக்தி மார்க்கமு தோனு நின்னு
வர்ணிஞ்சு சுன்ன நாபை — (த்ஸல)

சரணம்.

எந்து போது நேநேமி ஜேயுதுனு
எத்ஸோட மொர பெட்டு துனு
தந்த நலதோ ப்ரொத்து போவலேனு
தாள ஜாலரா த்யாக ராஜவினுத — (த்ஸல)

**பொருள் :—** ஸாகேதபட்டணம் என்ற அயோத்தியில் அவதரித்த ராம! என்மீது கோபம் (தயவில்லாதது) ஏன்?

உன்னிடம் ஆசை நிறைந்து, பக்தி மார்க்கத்தில் சொன்னபடி (உன் சரித்ரம், கேட்டும், படித்தும், பாடியும், அர்ச்சித்தும், வந்தனே செய்தும் இப்படி ஒன்பது விதமாக) உன்னே வர்ணித்துக் கொண்டிருக்கும் என்னிடம் கோபமேன்.

எங்கே நான் போவேன்? என்ன செய்வேன்? யாரிடத்தில் முறையிடுவேன். (எப்பொழுது நான் உன்னுல் ஏற்றுக்கொள்ளப் படவில்லேயோ) என் செயல்கள் வேஷம் போட்டுக் காலம் கழிப்பவனேப் போலாக வேண்டுமா? என்னுல் இனி பொறுக்கமுடியாது. இந்த தியாக ராஜனேக் காப்பாற்று.

**கருத்து :—** ஶுத்தமான ஒரு பக்தனுக்கு உதாரணம் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள். அவர் தன் உள்ளத்தால் பகவானிடம் உருகி உருகி வேண்டுவது இதுதான். "நீ தான் அப்பா எனக்கு எல்லாம். வேறு யாருமில்லே எனக்கு. இங்கு என்னுல் வேறு செய்வதொன்றில்லே. நான் விரும்புவதும் வேறென்றுமில்லே.'' இதுதான் பக்தனின் நிலே. இதைக்காணவே பகவான் அவனுக்குப் பரீக்ஷைகள் வைத்து தேறவும் செய்விக்கிறுர்.

---

**சந்தாவை நினேவூட்ட தனிகடிதமெழுதினுல் வீண்செலவே**

# சந்தாதாரர்களுக்கு ஓர் வேண்டுகோள்!

அநேக நமஸ்காரம்!

ஈசுவரன் அருளாலும், ஸ்ரீ ஜகத் குருவின் க்ருபையாலும், உங்கள் ஆதரவாலும் 12-ம் ஆண்டு முடிய இன்னும் 1-மாதமே இருக்கிறது. பலரது சந்தா புரட்டாசியுடன் முடிவடைகிறது. இவ்வாண்டில் துவக்கி, இவ்வாண்டிலேயே ஸ்ரீ கணேச புராணம், ஹாலாஸ்ய மாஹாத்மியம், சாந்தி விலாஸம் என்பன முடிவு பெறுகின்றன.

ஜ்யோதிஷபானு பாரத் க்ரஹ ஸஞ்சார ஆசிரியர் எழுதிய கோசாரப்பலன் பேருதவியாக இருந்தது. ஸத்கதாம்ருத கலாநிதியின் தியாகோபநிஷத் பலரின் ஆதரவைப்பெற்றது. ஆயுர்வேதம், ஆங்கில வைத்யம், சித்த வைத்யம், யுனானி வைத்யம் முதலியவைகளை நன்கு கற்றவரும், பரோபகாரியுமான டாக்டரின் விஷயம் பலருக்கு உபகாரமாயிருந்தது.

பதிமூன்றாம் புத்தாண்டில் இவர்களும், மற்றும் சில பண்டிதர்களும் விஷயதானம் செய்வார்கள். இதுவரை வெளிவராத **கல்கி புராணம்** பெரும் பகுதியில் இடம் பெறும். மற்றும் பல புது அம்சங்களுடன் தோன்றும்.

எங்களுக்கு மேலும், மேலும் உத்ஸாஹத்தைக் கொடுக்க உங்கள் ஆதரவை வேண்டுகிறோம். அதற்கு, நமது சந்தாதாரர்கள் ஒவ்வொருவரும் தங்கள் நண்பர் ஒருவரை சந்தாதாரராகச் சேர்த்து, பத்ரிகையை மென்மேலும் பெருமையடையச்செய்ய வேண்டுகிறோம். தர்மத்திற்கு உழைக்க சதாகாலமும் தயாராயிருக்கிறோம். சந்தாதாரர்கள் அதிகமாக இருந்தால் ஏனைய பத்ரிகைகளுடன் போட்டிபோட்டுக் கொண்டு, நாமும், நமது பத்ரிகையை அதிக பக்கங்களுடனும், இன்னும் பல அரியவிஷயங்களுடனும் வெளியிடலாம்.

உங்களுடைய சந்தாதான் பத்ரிகையின் மூலதனம். ஆதலால், தாங்கள் தயைசெய்து இன்றே உங்களுடையசந்தாவையும் அனுப்புவதோடு தங்கள் நண்பர் ஒருவரையும் சேர்த்து ரூ. 5 சந்தா கட்டச்சொல்லி பத்ரிகையை வளர்ச்சியடையச் செய்யவேணுமாய் நன்றியுடன் கேட்டுக்கொள்கிறோம்.

**ஆசிரியர் & மானேஜர்,**
வைதிக தர்ம வர்த்தனீ.

**நீங்கள் வளர்த்த குழந்தையை உற்சாகப்படுத்துங்கள்**

## புத்தக அறிமுகம்.

### இலவசம்! கட்டிய 300 ரூபாயும் திரும்பி வரும்!!

**ஸ்ரீ மத் ராமாயணம்:** நாகராக்ஷர மூலம். ப்ரதிபத தமிழர்த்தம். இது வரை 10 பாகம் வெளிவந்துள. 7 பாகம், விரைவில் வரும். நல்ல எழுத்து! நல்ல பைண்ட்! நல்ல காகிதம்! சிறந்த தர்மம்! முதலாண்டிற்கு 60 ரூ. அளித்து 10 பாகங்களைப் பெறலாம். மறு படி 5 வருஷம் மாதம் 5 ரூபாயாகக் கட்டவேண்டும். முடிவில் 85 ரூ. விலையுள்ள 17 பாகமும், கட்டிய ரூ. 300ம் வரும். விவரமும் புத்தகமும் வேண்டியவர் ஸ்ரீ M. N. ராமஸ்வாமி அய்யர், பேங்கர், 1, ஜட்ஜ் ஜம்புலிங்கமுதலி தெருவு, மைலாபூர், மதராஸ் என்ற விலாஸத்திற்கு எழுதவும். கிஷ்கிந்தாகாண்டம் வரை 10 பாகம் 4098 பக்கத்தில் வந்துளது.

**தர்மசாஸ்த்ர சுருக்கம்:** [தமிழ் 290 பக்கம். விலை 3 ரூ. தபால் சார்ஜ் சுமார் 80 ந. பை. குருகுலம், 2, ஸ்டேஷன் ரோட், W. மாம்பலம், T. நகர், சென்னை-17ல் கிடைக்கும்.] வேதஸாரம், ஸ்மிருதி, 18 ஸ்மிருதிகளின் ஸாரம், வைத்யநாததீக்ஷிதீயம், அதன் ஸாரம் முதலியவை அடங்கியது இந்த நூல். வர்ணாச்ரமகாண்டம், ஆந்ஹிக காண்டம், ப்ராத்த காண்டம், ஆசௌச காண்டம் இவைகளின் ஸாரம் மிகத்தெளிவான நடையில் சிறந்த பத்ரிகையில் அச்சானது. நான்காவது பதிப்பிது. இதிலிருந்தே இதன் பெருமை விளங்கும். இதைப் படித்தால், பலதர்மங்களை ஸம்ஸ்கிருதமறியாத எல்லோருமறியலாம். தர்ம பொக்கிஷமான இதை சந்தாதாரர்களுக்காக 25 காபிகளே வாங்கிவைத்திருக்கிறோம். வேண்டியவர்கள் முன்னதாக வாங்கிக்கொள்ளுங்கள்.

### சந்தாதாரர்களுக்கு ஓர் அறிய வாய்ப்பு!

சாதுர்மாஸ்ய புண்யகாலத்தைக் கருதி நமது சந்தாதாரர்கள் எல்லோரும் தர்ம விஷயங்களை அறியவேண்டும் என்ற நோக்கத்துடன் அடுத்த பக்கம் கண்டுள்ளபடி எமது நூல்களின் விலைகளை இரண்டு மாதங்களுக்குக் குறைத்துள்ளோம். சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு முந்திக்கொள்ளுங்கள். தேவையான நூல்களுக்கு கீழ்க்கண்ட விலாஸத்திற்குக் கடிதம் எழுதுக:

**ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,**
(வைதிக தர்ம வர்த்தனீ பத்ராசிரியர்)
2, ஸ்டேஷன் ரோடு; மேல மாம்பலம், சென்னை-17.

N. B.—நூல்கள் சென்னையில் இருப்பதால், கடவாசல் வைதிக தர்மவர்த்தனீ கார்யாலயத்திற்கு எழுதாமல் சென்னைக்கே எழுதுங்கள்.

---

**சிலருக்கு வேலை அதிகமிருக்கலாம்.** ஞாபகப்படுத்துகிறோம்.

பாலர் பகுதி.

# பால பாரதம்.

விராட பர்வா—(ஆடிமீ தொடர்ச்சி)

கே: விராடன் வெற்றியுடன் ஊருக்கு வந்தபின் உத்தர கோக்ரஹணத்தைக் கேட்டு என்னசெய்தான்?

ப: சிறுவனுன உத்தரன் கௌரவருடன் போருக்குச் சென்றதை கேட்டவுடன் நடுங்கி சதுரங்க ஸேனைகளை அங்கு போகச் சொன்னான். அதற்குள்ளாக உத்தரன் ஜயித்து வந்தான் என்ற ஸமாசாரம் கிட்டியது.

கே: தனக்கும் ஜயம், புத்திரனுக்கும் ஜயம் என்பதால் பேரானந்தமடைந்து இருப்பான். அதன் பின்?

ப: பேரானந்தத்தால் புத்தித் தடுமாறி அருகிலுள்ள ஸன்யாஸியான தர்மரை பாசைக்காயினுல் அடித்து இரக்தம் வரும்படிச் செய்தான்.

கே: ஸந்தோஷமானுல் அவரை அடிக்க வேண்டுமா?

ப: விராடன் தன் குமாரனே ஜயித்தான் எனக் கூற, அல்ல—பேடியே ஜயித்தான்! என்று ஸந்யாஸி கூறினர். அதனுல் கோபங்கொண்டு அடித்தான். அச்சமயத்தில் அர்ஜுனனும் உத்தரனும் வர, விராடன் அளவிலா மகிழ்ச்சிகொண்டு, புத்ரனைக் கட்டியணைந்தான்.

கே: உத்திரன், இவர்கள் பாண்டவர்கள் என விராடனுக்குக் கூறவில்லையா?

ப: அர்ஜுனன் சொற்படி அதை வெளியிடாமல், எப்படி நீ ஒருவனுக எல்லோரையும் ஜயித்தாய்? எனக் கேழ்க்கும் போது, ஒரு தேவ புத்ரன் வந்து எனக்கு ஸகாயம் செய்தான் என்றுன்.

கே: அவன் யார் என விராடன் கேட்கவில்லையா?

ப: கேட்டதுடன், அத்தகைய வீரனுக்கு எனது புத்திரி உத்தரயைக் கொடுப்பேனே என்றுன்.

---

இந்த மாதமே சிலர் அனுப்பியதற்கு நன்றி பல.

கே: எப்பொழுது விராடன், பாண்டவர்கள் தான் என்று எவ்வாறு தெரிந்துகொண்டான்?

ப: அன்றிரவு பாண்டவர் எல்லோரும் ஒன்று கூடும் பொழுது தர்மரைக் காயப்படுத்திய விராடனை அப்பொழுதே கொல்வதாக பீமன் கூற, ஓராண்டு நம்மை யாதரித்த — அன்ன மளித்த — அவனைக் கொல்லலாகாது. நாளை காலை ராஜவேஷத்துடன் ஸிம்மாஸனத்தில் அமருவோம். அப்பொழுது ஆக்ஷேபித்தால் கொல்லலாம் என்றார். மறுநாள் அங்ஙனமே அமர, முதலில் அவன் ப்ரமித்து, நீங்கள் யார்? எனக் கேட்க, உத்தரன் மூலம் உண்மை யுணர்ந்து, அர்ஜுனனுக்கு உத்தரயைக் கொடுத்தான். தனது சிஷ்யை ஆதலால் தன் மகனை அபிமன்யுவுக்குக்கொடுத்து கிருஷ்ணன் முதலியவர் முன்னிலையில் விவாஹம் நடத்திவைத்தார்.

## உத்யோக பர்வா.

ப: ஆதிபர்வா ஸபாபர்வா வனபர்வா விராடபர்வா ஆகியவைகளைச் சொன்னேன். இனி மிகச் சுருக்கமாக உத்யோக பர்வா முதலியவைகளைச் சொல்கிறேன் கேள்.

கே: உத்யோக மென்றால் வேலை யல்லவா? எதனால் அதற்கு உத்யோக பர்வா என ஏன் அதற்கு வந்தது?

ப: பாண்டவர்களும் கௌரவர்களும் போர் புரியு முயற்சி செய்ததால் அதற்கு உத்யோக பர்வா எனப் பெயர் வந்தது.

கே: ஆனால் இருவருமே யுத்தம் செய்வது என்ற முடிவிற்கே வந்தார்களா? ஸமாதானத்தைப் பற்றி எவரும் சிந்திக்கவில்லையா?

ப: கிருஷ்ணன் சொற்படி துருபதராஜனது புரோஹிதர் த்ருதராஷ்டரிடம் சென்று எவ்வளவோ நீதி கதைகளைக் கூறி பாண்டவருக்குப் பாதி ராஜ்யம் கொடுத்து ஸமாதானம் செய்துக்கொள்ளச் சொன்னார்.

---

**அடுத்த மாதமே அனுப்புவதாக சிலர் கடிதமெழுதினர்.**

| | | ரூ. | ந.ப. | ரூ. | ந.ப. |
|---|---|---|---|---|---|
| 18 | *நித்ய பஞ்சாயதந பூஜையும் பஞ்சாக்ஷரி ஸூர்ய நமஸ்காரமும் | 0 | 37 | 0 | 28 |
| 19 | சிவாலய வழிபாடு .... .... .... | 0 | 37 | 0 | 28 |
| 20 | காசி, கயா, பிரயாகை, சேது யாத்திரை .... ... | 0 | 37 | 0 | 28 |
| 21 | ஸ்ரீசங்கர சரிதம் பூஜா கல்பத்துடன் .... .... | 0 | 37 | 0 | 28 |
| 22 | ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய த்ரிசதீ (தமிழ் அர்த்தத்துடன்) .... | 0 | 37 | 0 | 28 |
| 23 | ஸ்ரீ சிவராத்ரி பூஜையும் கதையும் ... .... | 0 | 25 | 0 | 19 |
| 24 | துளஸீ சரிதமும் – பூஜாகல்பமும் .... .... | 0 | 25 | 0 | 19 |
| 25 | சித்ரகுப்த, காமாக்ஷி (காரடை நோன்பு) ஸ்ரீராமநவமீ பூஜாகல்பங்கள் | 0 | 25 | 0 | 19 |
| 26 | ஸ்ரீ வரலக்ஷ்மீ வ்ரதமும் பூஜா கல்பமும் .... .... | 0 | 25 | 0 | 19 |
| 27 | விநாயகசதுர்த்தி பூஜாகல்பம் .... .... | 0 | 25 | 0 | 19 |
| 28 | சூதக ஆசௌச, விளக்கம் .... ... | 0 | 25 | 0 | 19 |
| 29 | ஸ்ரீகோபிகா கீதமும்–ஸ்ரீபஜகோவிந்தமும் (2ம் பதிப்பு) .... | 0 | 19 | 0 | 14 |
| 30 | ஆதித்யஹ்ருதயமும், கனகதாராஸ்தவமும் .... .... | 0 | 19 | 0 | 14 |
| 31 | ஸங்க்ராந்தி பூஜையும், கோ பூஜையும் (2-ம் பதிப்பு.) .... | 0 | 19 | 0 | 14 |
| 32 | ப்ரதோஷ பூஜை, கதை .... ... .... | 0 | 19 | 0 | 14 |
| 33 | வியாஸ சரிதம் ... ... .... | 0 | 12 | 0 | 09 |
| 34 | அஷ்டபதி தத்வார்த்த ஸாரம் ... ... .... | 0 | 12 | 0 | 09 |
| 35 | சனிவார வேங்கடேச பூஜையும் அஷ்டோத்தரமும் .... | 0 | 12 | 0 | 09 |
| 36 | காவேரி பூஜை ... .... .... | 0 | 12 | 0 | 09 |

12—8—59 முதல் 12—10—59 வரை இந்த விலை.

* இந்த அடையாளமுள்ளது நாகரமும், தமிழும் கலந்தது. விலாஸம் தெளிவாக எழுதுங்கள்.

புஸ்தக விபரங்களுக்கு :- ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,
2, ஸ்டேஷன்ரோடு, W. மாம்பலம், சென்னை–17க்கு எழுதுங்கள்.



# சாந்தி விலாஸம்.

( ஸ்ரீ தீ. ரா. கணபதி தீக்ஷிதர் )

40. अन्नं धान्यं वसु वसुमतीत्युत्तरेणोत्तरेण
व्याकृष्यन्ते परमकृपणाः पामरायद्वदित्थम् ।
भूमिः स्वर्द्यौः द्रुहिणगृहमित्युत्तरेणोत्तरेण
व्यामोहयन्ते विमलमतयोऽप्यस्थिरेणैव धाम्ना ॥

அந்நம்தாந்யம் வஸுவஸுமதீத் யுத்தரேணோத்தரேண
வ்யாக்ருஷ்யந்தே பரமக்ருபணா: பாமராயத்$^{3}$வதி$^{3}$த்த$^{2}$ம்।
பூ$^{4}$மி: ஸ்வர்த்$^{3}$யௌ: த்$^{3}$ருஹிணக்$^{3}$ருஹமித்யுத்தரேணோத்தரேண
வ்யாமோஹயந்தே விமலமதயோப்யஸ்தி$^{2}$ரேணைவதாம்னா ॥

பாமரர் அன்னம் தான்யம் தநம் பூமி இவைகள் வேண்டும் என மேல்மேலும் ஆசைப்படுவதுபோல் விஷயமறிந்தவர்களும் பூலோக ஸுகம் ஸ்வர்க்க ஸுகம் ப்ரும்மலோக ஸுகம் என மேன்மேலும் அழிவுள்ள இன்பத்தையே வேண்டுகிறார்களே! அழிவற்ற மோக்ஷத்தை விரும்புவதில்லையே.

41. प्रायश्चित्तं सकृदुपनतेवा प्रमादात्कृतेवा।
भूयोभूयोऽप्यवहिततरैस्साधिते कस्समाधिः ।
कारुण्याब्धिर्यदि पुरहरः सत्सु कामन्दयेत
भ्रष्टे मादृश्यपि सदयतेच्चेत्क्षतोधर्मसेतुः ॥

ப்ராயஶ்சித்தம் ஸக்ருதுபநதேவா ப்ரமாதா$^{3}$த்க்ருதேவா
பூ$^{4}$யோபூ$^{4}$யோऽப்யவஹிததரைஸ்ஸாதி$^{4}$தேகஸ்ஸமாதி:।
காருண்யாப்$^{3}$தி$^{4}$ர் யதி$^{3}$புரஹர: ஸத்ஸு காமந்த$^{3}$யேத
ப்ரஷ்டே மாத்$^{3}$ருஶ்யபி ஸத$^{4}$யதே சேத் க்ஷதோ த$^{4}$ர்மஸேது:

ஒரு முறை அறியாமையாலோ தவறியோ ஒருவன் பாபம் செய்தால் அதற்கு ப்ராயஶ்சித்தம் உண்டு. தெரிந்தவர் வேண்டுமென்றே அடிக்கடி பாபம்செய்தால் அதற்கு ப்ராயஶ்சித்தமேது ? ஆனால் கருணாமூர்த்தியான பரமசிவன் தயைகொண்டு ஸத்துக்களின் அத்தகைய பாபத்தை அகற்றலாம். அவரும் என்போன்ற பாபியிடம் தயை காட்டினால், தர்மத்தின் வ்யவஸ்தையே அழிந்து

---

மாதம் முதல்வாரத்தில் இந்த தர்மத்தை செய்துவிடுங்கள்

விடும். அத்தகைய பாபி நான் என தன்னைக் குறைத்துத் தாழ் மையைக் காட்டுகிறார். (அவர் பாபியல்ல. பாபிக்காகக் கூறியது.)

42. साध्याशम्भोः कथमपिदयेत्यप्य साध्योपदेशः
कोपं तस्य प्रथम मपनुद्यैव साध्यः प्रसादः ।
कोपोवर्णाश्रम नियमिताचार निर्लङ्घनोत्थः
शान्ति नेयः सकथमधुनाऽप्य व्यवस्थाप्रवृत्तेः ॥

ஸாத்[4]யா ஶம்பே[4]ா: கத[2]மபி த[3]யேத் யப்யஸாத்[4]யோபதே[3]ஶ:
கோபம் தஸ்ய ப்ரத[2]ம மபநுத்யை[3]வ ஸாத்[4]ய: ப்ரஸாத[3]:।
கோபோ வர்ணாஶ்ரம நியமிதாசார நிர்லங்க[4]னோத்த[2]:
ஶாந்திம்நேய: ஸகத[2]மது[4]நாப்யவ்யவஸ்த[2]ா ப்ரவ்ருத்தே: ॥

எந்தப் பாடுபட்டாவது சிவனின் தயவைத் தேடலாம் என்று கூறுவதும் தகாது. ஏன்? முதலில் அவர் கோபத்தைத் தணித் தன்றோ தயவைப் பெறவேண்டும். நாம் வர்ண ஆஶ்ரமங்களுக் கேற்பட்ட ஆசாரங்களை விட்டதனால் சிவனுக்குக் கோபம் உண்டா கிறது. ஒரு வ்யவஸ்தை இல்லாமல் அநாசாரத்தையே கைக் கொண்ட நாம் எப்படி அவர் கோபத்தை அகற்றுவது?

அநாசாரமுள்ளவரிடம் சிவ கோபம் உண்டாகும். ஆசார முள்ளவரிடம் தயை உண்டாகும்.

43. इष्टापूर्तै र्निगमपठनैः कृच्छ्रचान्द्रायणाद्यैः
स्वामिन्न न्यैरपि तवमनः काममावर्जयेम ।
मध्ये मध्ये यदिननिपतेत् कर्मणां चोदितानाम्
ज्ञानं श्रद्धेत्युभयमपि नोजाति वैर्यर्गळेव ॥

இஷ்டாபூர்தைர் நிக[3]மபட[2]னை:க்ருச்ச்ர சாந்த்[3]ராயணாத்[3]யை:
ஸ்வாமிந் நந்யை ரபிதவமந: காமமாவர்ஜயேம ।
மத்[4]யே மத்யே யதி[3]நநிபதேத் கர்மணாம் சோதி[3]தாநாம்
ஞானம் ஶ்ரத்[3]தே[4]த் யுப[4]யமபி நோஜாதி வைர்யர்கலேவ ॥

யாகம்செய்வது, குளம்வெட்டுவது, வேதமோதுதல், க்ருச்ர சாந்த்ராயணம் முதலியவைகளாலும் மற்ற கர்மாக்களாலும் ஸ்வா மின்! உமது மனதை வசப்படுத்திவிடலாம். ஆனால் அந்த கர்மாக் களைச் செய்ய அறிவு, ஶ்ரத்தை இரண்டும் முக்கிய மென்கிறதே விதி! அது ஸஹஜ சத்ருபோலும், தாழ்ப்பாள்போலும் குறுக்கே

---

சிலருக்கு இதை படிக்க அவகாசமிராதென்பது உண்மை

நிற்கிறதே! க்ஞானத்துடனும் ஶ்ரத்தையுடனுமே கர்மாக்களைச் செய்யவேண்டும். மற்றது வீணாகும்.

44. निर्मर्यादः परमचपलो निस्समाज्ञान राशिः
माद्दक्षोऽन्यः क इति भुवने मार्गणीयस्त्वयैव ।
ईद्दक्षेऽपि क्वचिदिह दययेति कौतूहलं चेत्
स्वामिन्विश्वेश्वर तव भवं निस्तरेयं तदाहम ॥

நிர்மர்யாத[3]: பரமசபலோ நிஸ்ஸமா க்ஞாநராஶி:
மாத்ருக்ஷோऽன்ய: கஇதிபு[4]வனே மார்க[3]ணீயஸ் த்வயைவ।
ஈத்[3]ருக்ஷேऽபி க்வசிதி[3]ஹ த[3]யயேதி கௌதூஹலம் சேத்
ஸ்வாமின் விஶ்வேஶ்வர தவப[4]வம் நிஸ்தரேயம் ததா[3]ஹம் ||

தர்ம எல்லையை மீறியவன், மிக்க சஞ்சல சித்தன், ஈடில்லாத அக்ஞாநராஶி இத்தகைய என்னைப்போன்ற வேறு யாராவது உலகில் இருக்கிறானா? என்று நீரே தேடிப்பாரும்! இப்படிப்பட்ட மோசமானவனுக்கும் அருள்புரியவேண்டுமென்ற ஒரு வேடிக்கையான எண்ணமிருந்தால், ஓ ஸ்வாமின்! விஶ்வேஶ்வர!! அப்போது தான் நான் பிறவிக்கடலைத் தாண்டமுடியும். அத்தகைய பாபியாக நாம் இருக்கக் கூடாது.

45. पश्चात्तप्ताः कथमपि विधेः किङ्करी भूय कुर्मः
सेवां शम्भोः इति च नियमं वापि सङ्कल्पयामः ।
आयुः किंमे किमिवकरणं दुस्तरे संकटेऽस्मिन्
स्वामिन्गौरीरमण शरणं न स्त्वमेव त्वमेव ॥

பஶ்சாத்தப்தா: கத[2]மபி விதே[4]: கிங்கரீபூ[4]ய குர்ம:
ஸேவாம் ஶம்போ: இதிசநியமம் வாபிஸங்கல்பயாம: |
ஆயு: கிம்மே கிமிவகரணம் து[3]ஸ்தரே ஸங்கடேऽஸ்மின்
ஸ்வாமின் கௌ[3]ரீரமண ஶரணம் நஸ்த்வமேவத்வமேவ ||

ஓ ஸ்வாமின்! கௌரீபதே!! பாபத்தைச் செய்த நான், ஐயோ! நான் பாபம் செய்துவிட்டேனே! இனிமேலாவது சிவனுக்குக் கிங்கரனாக இருந்து, தொண்டுசெய்வோம்! என ஸங்கல்பம் செய்துகொள்கிறோம். நமக்கு ஆயுள் ஏது? ஸாதநந்தான் ஏது? இந்த ஸங்கடமான நிலையில் நீர்தான் ஶரணம்! நீரே ஶரணம்!! இளமையில் பாபம் செய்து, பக்தி செய்யாதிருந்து, வயதானபின் தவிப்பதில் பயனென்ன?

---

**புண்யத்திற்காகஇதைபடிக்க வேண்டுமென பிரார்த்தனை**

# ஆவணிமீ கோசாரப்பலன். ஜோதிஷப் பகுதி.

ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி, பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்.
4, கிருஷ்ணமாசாரி தெரு, தி. நகர், சென்னை-17.

## மேஷ ராசி

அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

குரு அஷ்டமத்திலிருக்கிறர். சனி பாக்கியத்தில் இருக்கிறர். ராகு ஆறிலும், கேது விரயத்திலும் இருக்கிறர்கள். சூரியன் ஆறிலிருக்கிறர். இதனல் தெய்வ காரியங்களிலும், புண்ய காரியங்களிலும் செலவுகள் உண்டாகும். வீண் வகையிலும் செலவுகள் உண்டாகும். சிநேக பிரிவு ஏற்படும். ஸாமான்யமாய் தேகசுகம் பார்த்து குணமாவதுடன் அலைச்சல் காரியங்களும் ஏற்படுவதாகும். தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்திரம் பாராயணம் செய்துவர செலவு குறையும்.

## ரிஷப ராசி

கிருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய

குரு ஸப்தமத்திலும், சனி அஷ்டமத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலும் இருக்கிறர்கள். சூரியன் சுகத்திலிருக்கிறர். ராஜாங்க காரியங்கள் தடைப்பட்டு கூடிவரும். பெரிய மனுஷ்யர்கள் சிநேகிதங்கள் இவர்களிடம் ஆதரவு ஏற்படும். குடும்ப நடப்பில் சில சச்சரவு ஏற்பட்டு நீங்கும். வருமானம் வந்தும் நிம்மதியிராது. பந்துக்களால் கலக சேதி உண்டாகும். நவக்கிரஹ சாந்தியும், பிரதி சனிக்கிழமை சனிக்கு அர்ச்சனை செய்துவரவும் பீடை விலகும்.

## மிதுன ராசி

மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம்பாதம் முடிய

குரு ஆறிலும், சனி ஏழிலும், ராகு நான்கிலும், கேது பத்திலும் இருக்கிறர்கள். சூரியன் மூன்றிலிருக்கிறர். இதனல் புதிய வகை சிந்தனைகள் ஏற்படும். சிலருக்கு இருப்பிடம் மாறும்படியாகும். அல்லது வெளியூர் போய்வர நேரும். சில பொருள் விற்கும்படியாகும். செய் தொழிலில் சோர்வு ஏற்படும். சிலருக்கு குடும்ப நடப்பில் ஸௌஜன்யம் குறையும். வீண் வகை செலவுகள் உண்டாகும். சுப்ரமணியருக்கு அபிஷேகம் செய்வது நன்மை.

## கடக ராசி

புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய

குரு பஞ்சமத்திலும் சனி ஆறிலும் ராகு மூன்றிலும் கேது பாக்யத்திலும் இருக்கிறர்கள். சூரியன் தனத்திலிருக்கிறர். ராஜாங்க வியவகாரம் முதலியவைகளில் எதிர்பார்த்தவை அனுகூலமாகும். புதிய வகையில் சிலருக்கு வருமானம் கூடும். அதிகாரிகளிடம் ஆதரவு ஏற்படும் சுபவிஷயமாய் செலவு செய்ய நேரும். வெளியூர் போய்வர நேரும். பந்துக்களால் சிறிது கவலை ஏற்படும். துர்க்கா ஜபம் செய்துவர மேன்மை யுண்டாகும்.

## சிம்ம ராசி

மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு நான்கிலும் சனி பஞ்சமத்திலும், ராகு குடும்பத்திலும் கேது 8 லும் இருக்கிறர்கள். சூரியன் ராசியில் இருக்கிறர். இதனல் புத்திராதிகளுக்கு

அசௌக்கியம். வைத்திய வகையில் செலவுகள், வரவேண்டிய பணம் தடையாகுதல் இப்படி ஏற்படும். செய் தொழிலில் நன்மை உண்டாகும். பந்துக்களால் கவலேயும், அன்னியர் சகாயமும் ஏற்படும். சில பொருள் விற்கநேரும். ஆதித்ய ஹ்ருதயம் பாராயணம் செய்வது உத்தமம்.

## கன்னியா ராசி

### உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு மூன்றிலும், சனி நான்கிலும் ராகு ராசியிலும் கேது ஏழிலும் இருக்கிறார்கள். சூரியன் விரயத்தில் இருக்கிறார். இதனால் சுப விஷயமாயும் மற்றும் எதிர்பார்க்காத செலவுகளும் உண்டாகும். மன நிம்மதி குறையும். சரீர சுகக் குறைவும் ஏற்படும். நிர்ப்பந்தங்கள் அதிகமாகும். சிலருடைய பகையும் உண்டாகும். குடும்பத்தில் செலவுகள் அதிகமாவதால் பணமுடையும் சிலருக்கு காரணமுண்டு. விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் அவசியமாகும்.

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு இரண்டிலும் சனி மூன்றிலும் ராகு விரயத்திலும் கேது ஆறிலும் இருக்கிறார்கள். சூரியன் லாபத்தில் இருக்கிறார். இதனால் துற்சினேகத்தால் வருத்தம் ஏற்படும். சிலருக்கு வீண் அபவாதம் உண்டாகும். இருப்பிடம் மாறும்படியான நிர்பந்தமோ அல்லது அவசிய பிரயாணமோ உண்டாகும். சபல சித்தம் உண்டாகும். சுபகாரியங்களில் ஈடுபடுதல் அவ்வகையில் செலவுகள் இப்படி ஏற்படும். பெரியோர் ஆதரவு முடிவில் உண்டாகும். பந்து சேர்க்கையும் சில பொருள் வாங்கவும் நேரிடும். பிரதிவெள்ளிக்கிழமையும் அம்பாளுக்கு அர்ச்சனை செய்யவும்.

## விருச்சிகராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு ராசியிலும் சனி குடும்பத்திலும் ராகு லாபத்திலும் கேது பஞ்சமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் பத்தில் இருக்கிறார். இதனால் அலேச்சல் காரியங்கள் குடும்ப கவலே, சிலருக்கு வெளியூர் பிரயாணம் இப்படி ஏற்படும். புதிய வகை சிந்தனைகளும் ஏற்பாடுகளும் உண்டாகும். பிறர் உதவியை எதிர்பார்க்க நேரும். பழைய பொருள் சில விற்பனையாகும். விவாத வியாஜ்யங்கள் தாமதமாகும். பிரதி செவ்வாய் கிழமையும் விரதமிருப்பது நன்மை.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு விரயத்திலும் சனி ராசியிலும் ராகு பத்திலும் கேது சுகத்திலும் இருக்கிறார்கள். சூரியன் பாக்கியத்திலிருக்கிறார். இதனால் தேக சுகம் சிறிது பாதித்து குணமாகும். சிலருக்கு வெளியூர் அலேச்சலும் வீண் செலவுகளும் ஏற்படும். சுப விஷயமாய் செலவுகள் ஏற்படும். சிலருடன் விரோதப்படவும் கூட்டுப்பிரிவு சிலருக்கு ஏற்படவும் காரணமுண்டு. வீண் கவலே ஏற்பட்டு நீங்கும். பிரதி வியாழனிலும் பிராம்மண போஜனம் ஒருவருக்குப் போட மேன்மை.

## மகர ராசி

### உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு லாபத்திலும் சனி விரயத்திலும் ராகு பாக்யத்திலும் கேது மூன்றிலும் இருக்கிறார்கள். சூரியன் அஷ்டமத்திலிருக்கிறார். இதனால் தொழிலில் வேதனை

---

**பல லௌகிக பேபர்களால் தர்ம ஞாபகம் மறக்கிறது.**

களும் குடும்ப வேதனைகளும் அதிகமாகும். அந்தரங்கமான கவலைகள் ஏற்படும். சிலர் விரோதம் உண்டாகும். பணத்தட்டு ஏற்பட்டு பிறர் உதவியால் சிறிது நிம்மதி ஏற்படும். கொடுப்பல் வகை நிர்ப்பந்தம் அதிகமாகும். தினமும் அல்லது சனிக்கிழமை தோறும் நவக்கிரகக் கோயிலை பிரதக்ஷிணம் செய்துவருவது நன்மை.

## கும்பராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு பத்திலும் சனி லாபத்திலும் ராகு அஷ்டமத்திலும் கேது இரண்டிலும் இருக்கிறார்கள். சூரியன் ஏழில் இருக்கிறார். இதனால் வெளியூர் அலைச்சலும் சுபகாரியங்களில் செலவுகளும் ஏற்படும். செய் தொழில் மேன்மைக்கு வரும். பெரிய மனுஷ்யர்கள் சினேகமும் ஆதரவும் ஏற்படும். குடும்ப சுகம் சிறிது குறையும். புதிய சினேகம் ஏற்படும். லலிதாஷ்டோத்திரம் பிரதி வெள்ளிக்கிழமையிலும் செய்வது நலம்.

## மீன ராசி

### பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குருபாக்யத்திலும் சனி பத்திலும் ராகு ஏழிலும் கேது ராசியிலும் இருக்கிறார்கள். சூரியன் 6 ல் இருக்கிறார். இதனால் ராஜாங்க மூலமாய் சில கவலை ஏற்பட்டு நீங்கும். செய்தொழிலில் வருமானம் கூடிவரும். சுப விஷயமாய் செலவுகள் உண்டாகும். குடும்ப சுகம் குறையும். திருப்தியான நடப்பு இராது. சினேக நன்மை ஏற்படும். பந்து சேர்க்கையும் சில புதிய ஏற்பாடுகளும் உண்டாகும். நவக்ரஹசாந்தி செய்வது நலம்.



# தார்மிகச் செய்திகள்:

**சாதுர்மாஸ்ய யாகம்:** ஜூலை 6வ முதல் 5 நாள் சென்னை திருவல்லிக்கேணியில் பிரும்மஸ்ரீ யக்ஞதீக்ஷிதர் ஷ யாகம் செய்தார்.

**ஸ்ரீரங்கம் கும்பாபிஷேகம்:** ஜூலை 6வ முதல் 12வ வரை லக்ஷம் ரூபாய் செலவில் ஷ வைபவம் நடந்தது.

**பிரதிவாதி பயங்கர ஸ்வாமி:** ஜூலை 15வ முதல் 26வ வரை சென்னையில் லோக க்ஷேமத்திற்காக வேதபாராயண பிரபந்த பாராயணாதிகளை நடத்தினார்.

**சாதுர்மாஸ்ய ஸங்கல்பம்:** ஸ்ரீ காஞ்சி காமகோடி 'சங்கராசார்ய ஸ்வாமிகள் சென்னை பூந்தமல்லிக்கு அருகிலுள்ள வாநகரமென்ற இடத்தில் வழக்கப்படி ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி, அனந்தானந்தர் முதலிய சிஷ்யர்களுடன் ஜூலை 20-ந்தேதி திங்கட்கிழமை நடத்தினார்கள். எண்ணிறந்த பக்தர்கள் தர்சித்து ஸமஷ்டி பிக்ஷை நடத்தினார்கள்.

**ஸ்ரீ பதஞ்ஜலி சாஸ்திரிகளின் தர்மப் பேச்சு:** இந்திய விசேஷ நீதிபதியான ஷியார் ஹிந்துமத தர்மசொத்து சட்டமும், அதை விரிவுபடுத்தி வரும் சட்டமும் ஹிந்து உரிமையை அழிப்பதாகும் என பலமாகக் கண்டித்தார்

---

## குமதி ஸுமதி ஸம்வாதம்.

மாதர் பகுதி.

கௌண்டின்ய கணபதி,
19, மூக்காத்தாள் தெரு, சென்னை-7,

குமதி: அம்மா ஸுமதி! தெரியாமல் உன் வாயைக் கிளப்பி விட்டேன். போதும்! போதும்!! நவ நாகரிகமென்றால் உனக்கு ரொம்ப எறிச்சல். அதை விட்டுவிட்டு வேறு விஷயம் பேசுவோம்.

ஸுமதி: நான் சொல்வது உனக்குப் பிடிக்கவில்லை. இருக்கட்டும், வேறு என்ன விஷயம் பேசப்போகின்றாய்?

கு: சென்ற ஆடிமீ ஐந்தாம் வெள்ளிக்கிழமை நமது பெண்களெல்லாம் வரலக்ஷ்மீ என்ற நோன்பு செய்து கையில் சரடு கட்டிக் கொண்டார்களே! அதைப் பற்றித்தான் கேழ்க்கலாமென்று இருக்கிறேன்.

ஸு: நன்றாகக் கேளு! மனம் குளிர ஸந்தோஷமாகத் தெரிந்தவரை சொல்லுகிறேன்.

கு: எல்லோரும் செய்யாமல் ஒரு சிலர் மாத்திரம் செய்கிறார்களே! அது என்?

ஸு: இதுதான் ஜாதி தர்மம், குல தர்மம் எனப்படுவது. அவரவர் முன்னோர் செய்ததை ஸந்ததியார் விடாமல் செய்ய வேண்டும்.

கு: ஆனல், மற்றவர் பண்ணக் கூடாதோ?

ஸு: கட்டாயம் எல்லோரும் செய்யத்தான் வேண்டும்! இதுவரை செய்யாதவர், அதைச் செய்கின்றவர் வீட்டுக்குச் சென்று, ஆரம்பித்து அதுமுதல் செய்துவரலாம்.

கு: எதற்காக இதைச் செய்வது?

ஸு: அஷ்ட லக்ஷ்மிகளும் நம் வீட்டிற்கு வரவேண்டும் என்று அதற்காகவே செய்வதாம். லக்ஷ்மி என்பது நாம் படத்தில் பார்க்கின்றோமே! அதுதான் என்று எண்ணிவிடாதே!

கு: வேறு என்ன?

ஸு: பொதுவாக ஐச்வர்யம் அல்லது பொருள். அழகான வீடு கிடைத்தால் அது கிரஹலக்ஷ்மியாம்.

---

**இந்த தர்மமே நமக்கு கூடவரும் துணைவன்.**

கு: சரிதான்! தனம் கிடைத்தால் "தனலக்ஷ்மி," தான்யம் கிடைத்தால் "தான்ய லக்ஷ்மி" என்பவை போன்றது தானே!

ஸு: ஆம்! இம்மையில் பாக்கியலக்ஷ்மி, முடிவில் மோக்ஷலக்ஷ்மி வரையில் அஷ்டலக்ஷ்மிகளும் லக்ஷ்மிதான்.

கு: இதற்கு வரலக்ஷ்மி என்று ஏன் பெயர் வந்தது?

ஸு: வர என்றால் சிறந்தது அல்லது இஷ்டமான வரம் அளிப்பது என்பது பொருள். இதை யனுஷ்டித்தால் ஸகல விதமான நன்மைகளும் உண்டாகும்.

கு: இதை, யார் யாருக்கு முதல்முதலில் உபதேசித்தது?

ஸு: ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியே ஸௌராஷ்ட்ர தேசத்தில் பத்ரச்ரவர் என்ற அரசன் மனைவியான சுசந்த்ரிகா என்பவளுக்கு உபதேசிக்க வந்து அவள் பெண்ணான ச்யாமைக்கே உபதேசித்தாள்.

கு: ஆனால், அந்த ராணிக்கு உபதேசிக்கவில்லையா?

ஸு: ஆம், தேவர்கள் மறைவாக விருப்பதில் ஆசைகொண்டவர்கள். ஆதலால் மஹாலக்ஷ்மி ஒரு கிழ ஸுமங்கலி ரூபம் தரித்து ராணியிடம் வந்தாள். மஹாலக்ஷ்மி அவதாரம் செய்த ஆடிமீ சுக்ல த்வாதசி வெள்ளிக்கிழமை. இன்று ஒரு பூஜையும் செய்யாமல் ஸாமான்ய ஸ்த்ரீபோல் சாப்பிட்டுவிட்டு, வெத்திலை போட்டுக்கொண்டிருக்கிறாயே! உனக்கு புத்தியிருக்கிறதா? என்றாள்.

கு: ஒரு ராணியை இப்படிக் கேழ்க்கலாமா?

ஸு: அதனால் தான் அவளுக்குக் கோபம் வந்தது. வந்த லக்ஷ்மியைக் கன்னத்தில் அறைந்தாள். ஒருவர் கேளாமல் இருக்கும்பொழுது உபதேசம் செய்த பயனிது; என்று வருத்தத்துடன் திரும்பிச் சென்றாள் மஹாலக்ஷ்மி. ராணியின் கற்பினால் அவளை சபிக்கவில்லை.

கு: அவள் குமாரி ச்யாமைக்கு அதை உபதேசித்தாள் என்றாயே அது எப்போ?

ஸு: அக் குமாரி, அவளை தன்னிருப்பிட மழைத்துச் சென்று விஷயத்தை விசாரித்து, எனக்குத்தான் அதை உபதேசம் செய்யுங்களேன்! என்றாள்.

---

கு : கேட்டவருக்கே கூறவேண்டுமென இவளுக்கு உபதேசித்தாளா? அதனால் என்ன பயன் உண்டானது ?

ஸூ : இராஜகுமாரி அதை ஶ்ரத்தையாகச் செய்தாள். புருஷன் வீட்டில் அமோகமாக செல்வம் வளர்ந்தது! அதை அனுஷ்டிக்காத அவளது பிறந்த வீட்டில் நாளுக்கு நாள் செல்வம் குறைந்து பிச்சை எடுக்கும் நிலைக்கு வந்தார்கள் !

கு : பெற்றோர் துன்பப்படுவதை மகளறிந்து உதவவில்லையா ?

ஸூ : ஒருவர் செய்த பாபத்தை அனுபவித்து, அதை அகற்றும் வரை யார் என்ன உதவி செய்தாலும் பயன்படாது.

கு : ச்யாமை செய்த உதவி எப்படி பயன்படாமல் போயிற்று?

ஸூ : ஒரு குடத்தின் நிறைய பொன் நாணயங்களைப் பெற்றோருக்கு அளித்தாள். அதை அவர்கள் தொட்டவுடன் அவ்வளவும் கரியாகிவிட்டது.

கு : ஆஹா ! என்ன ஆஶ்சர்யம் !! நம்பமுடியவில்லையே !! பிறகு அவர்கள் கதி என்ன ?

ஸூ : தெய்வானுக்ரஹத்தால்தான் செல்வ முண்டாக வேண்டும் என பெண், தாயை வரலக்ஷ்மீ வ்ரதத்தைச் செய்யும்படிக் கூறினாள்.

கு : அதனால் அவள் எழ்மை யகன்று பாக்யமுண்டானதா ?

ஸூ : ஸந்தேஹமென்ன ? இழந்த ராஜ்யத்தை அடைந்ததுடன் அதுவரை இல்லாத புத்ர பாக்யத்தையும் பெற்றாள் ! ச்யாமை புகுந்தவீடும் முதலில் ஏழையாகத்தான் இருந்தது. அவள் அந்த நோன்பைச் செய்ததால்தான் அங்கும் செல்வம் பொங்கிற்று.

ஒருநாள் ஶ்யாமையின் புருஷன் மனைவியை நோக்கி, நீ பிறந்த வீட்டிலிருந்து என்ன சீதனம் கொண்டுவந்தாய்? என்றார்.

கு : ச்யாமையின் புருஷன் இடக்காகக் கேட்டதை அவள் அறிந்தாளா ? என்ன பதில் சொன்னாள் ?

ஸூ : எல்லாவற்றையும்விடச் சிறந்த சீரான வரலக்ஷ்மீ வ்ரதத்தையே கொண்டுவந்தேனென்றாள். கணவன் அது ஓர் சிறந்த சீரா ? என்று பரிஹஸித்தான்.

---

கு : ச்யாமை என்ன கூறினுள் ?

ஸு : பிறகு பதில் கூறுவதாகச் சொல்லி, மறுநாள் உப்பில்லாமல், கரிகாய், குழம்பு, ரஸம் முதலியவைகளைப் பரிமாறினுள் பதிக்கு.

கு : அரசன் கோபங்கொள்ளவில்லையா ?

ஸு : உப்பில்லாத பண்டம் குப்பையிலே ! இது என்ன வாயில் வைக்க வழங்கவில்லையே ! என்ருன். ச்யாமை, உப்பு ஒரு விலை உயர்ந்த பொருளா ? என்ருள்.

புத்திசாலியான அரசன் உப்புபோல் வரலக்ஷ்மீ வ்ரதமே சிறியதாயினும் சிறந்த ரஸத்தை அளிப்பது என உணர்ந்தான்.

## ஸ்ரீ காமகோடி ஸதுபதேசம்.

நான் என் எல்லோர் வீட்டிற்கும் வருவதில்லை ? பக்தர் பலர், என்னைத் தம்தம் வீட்டிற்கு அழைக்கின்றனர். பக்தி பரவசமாகச் செல்லவும், பிக்ஷை செய்யவும் கூட விருப்பமுண்டு. ஆனல் ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரரைப் பக்தானுக்ரஹம் செய்வதற்காக ஆராதிக்கும் நான் ஆசாரத்துடன் ஆராதித்தால்தான் அருள் கிடைக்கும்.

● ● ● ●

முன்னர், க்ருஹஸ்தர் வீடுகளில் தூரே தனியாக பஹிஷ்டைகளுக்கு இடமுண்டு. அவர்கள் க்ருஹஸ்தர் கண்ணிலும் படார். குறலும் கேட்காது. தற்சமயம் உள்ள நிலை ப்ரஸித்தம். வபநம் கொட்டகை, தோட்டம் அல்லது வாசலில் நடக்கும். அவ்விடம் சாணிஜலத்தால் சுத்தம்செய்யப்படும்.

● ● ● ●

இவ்விரண்டு அபூர்த்தமும் உள்ள வீட்டில் நான் நுழைந்து அதனல் உண்டாகும் அனுசாரத்தை, சுத்த ஸ்வரூபியாய் சுத்த ஆசாரியர்களால் பூஜிக்கப்பட்டுவந்த ஸ்ரீ சந்த்ர மௌளீஸ்வரரிடம் கொண்டு செல்லலாமா ? [பழைய வழக்கப்படி குச்சுள்ளே பஹிஷ்டைகளும், தெருத் திண்ணையிலே வபநமும் நடத்தி வீட்டைச் சுத்தமாக வைத்திருங்கள்.]

**ப்ருஹதாரண்யகம், அபூர்வமான கல்கிபுராணம்**

# ஹாலாஸ்ய மஹிமை.

ஆகமப் பகுதி.

## பன்றிக்குட்டிகளுக்கு பாலும் பதவியும் அளித்தது.

(ஆடிமாத தொடர்ச்சி.)

குழந்தைகள் குரு காலில் விழுந்து மன்னிப்பு கேட்க பகவானே தாயாகி அருள் புரிவர் என்றூர். அங்ஙனமே காட்டில் இவர்கள் பிறந்தவுடன் தாய் பன்றி இறந்தது. பகவான் பன்றியாகி பாலளித்தார். அச்சமயம் வேட்டையாடவந்த பாண்டியனைப் பார்த்து இவர்கள் நமதுபக்தன் புதல்வர்கள் குரு சாபத்தால் இவ்வுருபெற்றனர். நாமே பால் தருகிறோம். இவர்களை அழைத்துச் சென்று அமைச்சர் பதவியில் அமர்த்து. பின்னர் சிவகணமாவார் என்றூர் பகவான். உடனே அவர்கள் மானிட உருவம் பெற அரசன் இறைவன் சொற்படி மந்திரிகளாக்கினர். சிவபக்தியில் ஈடுபட்ட அவர்கள் முடிவில் கைலை சென்று சிவகணமாயினர்.

## கரிக்குருவிக்கு உபதேசம்.

ஸுகுண பாண்டியன் ஆளுகையில் கரிக்குருவி ஒன்று இதர பக்ஷிகளால் ஹிம்ஸிக்கப்பட்டு வனஞ்சென்றது. அது தங்கிய மரத்தினடியில் வழிவசமாக வந்த சிவபக்தர் மதுரை சுந்தரேசனது பெருமையை சிஷ்யர்களுக்கு உபதேசித்தார். அதைக் கேட்ட குருவி மதுரை வந்து பொற்றாமரைப் பொய்கையில் முழுகி கோயிலை வலம் வந்து மநதால் கடவுளை த்யாநம் செய்தது. கருணாமூர்த்தியான பகவான் அதற்கு மிருத்யுஞ்ஜய மந்த்ரத்தை உபதேசித்தார். அதனால் அது நற்கதிபெற்றதுடன் அதன் ஸந்ததிகள் வலியன் குருவி என அழைக்கப்பட்டு பலமுள்ளதாயின. அப்பக்ஷியும் முடிவில் கைலைசென்றது.

## நாரைக்கு முக்தி.

### பொற்றாமரையில் மீன் இல்லாமை.

தாமரைத்தடாகத்தில் மீன்களைப் புஜித்து வளர்ந்து வந்த நாரை ஒன்று குளத்தில் நீர் வற்றியவுடன் வனகம் சென்றது. அங்கு ஓர் நதியில் முனிவர் முழுகும் போது ஜடா மண்டலத்தில் ஓடி விளையாடும் மீன்களைக்கண்டது.

---

**மற்றும் பல அரிய விஷயங்கள் அடுத்த ஆண்டில் வரும்.**

நல்லார் ஸஹவாஸ புண்யத்தால் அம்மீன்களைத் தின்னக் கருதாததுடன் அம்மீன்கள் என்ன புண்யம் செய்தன வோ என்றெண்ணிற்று. தற்செயலாக முனிவர் கூறிய மதுரை பொற்றாமரைப் பெருமைகளைக் கேட்டது. பேர வாவுடன் அங்கு சென்று பொய்கையில் முழுகி அங்கு துள்ளி விளையாடும் மீன்களைப் புசிக்காமல் பதினைந்து நாள் உபவாஸத்துடன் ஆலயத்தை வலம் வந்து மநதினால் துதித்தது. கருணையுள்ள பகவான் உனக்கு யாது வரம் வேண்டுமெனகேட்க, கைலையில் நற்கதி பெறவேண்டும். பொற்றாமரை பொய்கையில் மீன்களே இல்லாதிருக்க வேண்டும் என்றுகேட்க அங்கனமே அருள் புரிந்தார்.

## திரு ஆலவாயான்.

சுகுணபாண்டியனுக்குப் பின் இருப்பத்திரண்டு தலை முறைச் சென்றது. இடையில் ஒரு பிரளயம் தோன்றி ஸகல வஸ்துக்களும் அழிந்தன. ஆனால் மதுரா புரியைச் சார்ந்த மீனாக்ஷி ஆலயம், தீர்த்தம், இடப மலை முதலிய ஸ்தலங்கள் அழியாதிருந்தன. இறைவன் அரு ளால் பிரும்மா சேர சோழ பாண்டிய வம்ஸத்தைப் படைத்தார். வங்கிய சேகர பாண்டியன் மீனாக்ஷி ஆலய த்தருகே சிறு நகரத்தை அமர்த்தி பக்தியுடன் நீதி தவறா மல் அதை ஆண்டு வந்தான். ஒருநாள் சுந்தரேஸன் ஸன் னதியில் சென்று பண்டைய மதுரைமாநகரின் எல்லையை காட்டி அருள வேண்டுமெனப் பிரார்த்தித்தான். பகவான் ஒரு ஸித்தரைப்போல் வேடம் பூண்டு தனது அரைஞா ளாக இருந்த ஸர்பத்தை அவிழ்த்து விட்டு எல்லையைக் காட்டி வா என்றார். அது தனது வாலை வளைத்து வாயில் சேர்த்து இதனிடையில் உள்ளதே மதுரை எனக்காட் டிற்று. அந்த ஸர்ப்பத்தின் பிரார்த்தனைக் கிணங்கி அந்த நகரத்திற்கு ஆலவாயான் என்று பெயர் தோன்றிற்று. தெற்கு எல்லை திருப்பறங்குன்றம். வடக்கே ரிஷப மலை. கிழக்கே திரு பூவணம். மேற்கு திருவேகடமாம்.

## வேடனாக வந்து வெற்றி தந்தது.

விக்ரம சோழன் பாண்டிய நாட்டின் மீது படை யெடுத்து வந்தான். சேகர பாண்டியன் பகவானிடம்

---

**இந்த ஸ்வல்ப தாநம் செய்ய அனைவரும் முன்வாருங்கள்.**

சென்று முறையிட்டான். அஞ்சாது போர் புரி! துணை யாகி வெற்றித் தருவோமென்ற அசரீரி சொல் கிளம் பிற்று. இறைவன் சொற்பலத்தைக் கொண்டு பெரும் சேனை படைத்த சோழனை எதிர்த்தான். பாண்டியனது சொல்ப ஸேனை அடிபட்டிறந்தது. பாண்டியன் புறங் காட்ட நேர்ந்தது. சோழன் சேனை வெற்றி முழக்கம் வானளாவத் தோன்றிற்று. திடீரென ஒரு வேடராஜன் வந்து சோழன் ஸேனைமீது அம்பெய்தினன். ஒன்று ஆயி ரயாகி அச்சேனையை அழிக்க சோழன் திடுக்கிட்டு அவ் வம்பைப் பார்த்தான். அதில் சுந்தரேசன் எனத் தீட்டப் பட்டிருந்தது. ஆச்சர்யமடைந்து இறைவனே அவனுக்கு துணைவனாக வந்தார் என அறிந்து ஓடினன்.

## சங்கப் பலகை தந்தது.

பிரும்மா ஸாவித்ரீ காயத்ரீ ஸரஸ்வதிகளுடன் கங்கா ஸ்நாநம் செய்ய காசி சென்றார். ஸரஸ்வதி இடையே ஒரு வித்யாதரியின் காநத்தைக்கேட்டு மகிழ்ந்து நின்றாள். தங்களுடன் வராததுடன் என்னை விட்டு விட்டு எப்படி கங்கை சென்றீர் என ஸரஸ்வதி பதியைக் கேட்டாள். அவர் நீ தவறு செய்ததால் பல மானிடப்பிறவி எடுப்பாய் என சபித்தார். அவள் பணிந்து வேண்ட அ, என்ற எழுத்து வடிவன் மதுரா நாதன். 50 எழுத்துவடிவமான தேவியின் அம்சமானதால் நீ அடிமுடிகளை விட்டு 48 புலவர்களாகப் பிறந்து சாப மோசநமடைவாய் என்றார். அப்புலவர்கள் நாடெல்லாம் சென்று நற்பெயர் பெற்று மதுரை வர´பகவான் ஒரு புலவனைப்போல் வந்து வரவேற்றார். சேகர பாண்டியன் ஓர் சங்கக் கட்டடம் கட்டி யளித்து புலவர்களைப் பூஜித்தான். சோமசுந்தர ரும் ஒரு சங்கப் பலகையளித்து சிறந்த புலவர் வந்தால் இது வளர்ந்து இடம் தரும் என்றார். அதிலமர்ந்து புலவர் ஸம்ஸ்கிருதமுதல் 18 பாஷைகளில் பலபாக்களைப்பாடினர். அதில் சிறந்தவர்களுக்கே பலகை இடமளிக்கும். எல்லோ ரும் தம் தம் பாக்களை வைத்து யாருடைய பாட்டு இது? என அறியாமல் திகைத்தனர். பகவான் ஒரு புலவரைப் போல் வந்து அவரவர் பாடலை அளித்தார். புலவர் வேண்ட பகவானும் அதில் நடுநாயகமாக அமர்ந்தார்.

---

## தர்மிக்குப் பொன் முடிச்சு தந்தது.

சூடாமணி பாண்டியன் ஒரு சம்பகவனத்தை வைத்து அப்புஷ்பங்களைக் கொண்டு சுந்தரேசனுக்கு அலங்காரம் செய்து சம்பக சுந்தரேசன் என பெயர் வைத்துப் பூஜித்தான். இதைக்கண்ட குடிகள் அரசனை சண்பக பாண்டியன் என அழைத்தார்கள். வெய்யிற் காலத்தில் குடிகள் எல்லோரும் சண்பகவனத்தில் தங்குவார்கள். அரசன் மனைவியுடன் அங்கு உலாத்திக் கொண்டிருக்கும் போது ஒரு அத்புதமான வாஸனைத் தோன்றிற்று. அது அவள் கூந்தலின் இயற்கை வாஸனையா? அல்லது சேர்க்கை வாஸனையா என ஸந்தேஹம் கொண்டான். ஆயிரம் செம் பொன் காசை ஒரு மூட்டையாக்கிக் கட்டி தன் மனதில் பட்ட ஸந்தேஹத்திற்கு விடை கூறுபவர் இதை எடுத்துச் செல்லலாம் என்றார். ஒரு புலவரும் அதை விளக்க முன் வரவில்லை. மீனாக்ஷி சுந்தரேசனை அர்ச்சித்து வரும் " தருமி " என்பவன் தாய் தந்தையற்ற பிரும்மசாரி. அவன் மணம் செய்து கொள்ள அந்த பொருள் தனக்கு வேண்டுமென பகவானிடம் வேண்டினான். பகவான் ஒரு பாட்டை எழுதிக்கொடுத்து அதை ராஜ ஸபையில் காட்டி அப்பொன் முடியை வாங்கிக் கொள் என்றார். அதனால் அரசன் அப்பாட்டைக் கேட்டு தன் மனைவியின் கூந்தலின் இயற்கை வாசனையென அறிந்து அதை தர்மிக்கு அளிக்கும்படிக் கூறினான். நக்கீரர் எனும் பண்டிதர் அப்பாட்டில் பொருள் குற்றம் இருப்பதால் அதை அவருக்குத் தரலாகாதென தடுத்தார். ஏமார்ந்த தர்மி பகவானிடத்தில் முறையிட சுந்தரேசன் பண்டிதரைப்போல் ஸபையில் அமர்ந்து என்ன குற்றமென்றார். பத்மினி முதலிய உயர்ந்த ஜாதி ஸ்திரீகளுக்குக் கூட இயற்கை வாஸனை கிடையாதென கூறினார் அவர். பகவான் பார்வதியின் கூந்தல் எப்படி என அதுவும் அப்படித்தான் என்றார். பகவான் நெற்றிக்கண்ணைக் காட்டினார். நெற்றிக் கண்ணை காட்டினும் குற்றம் குற்றமே என்றார் நக்கீரர். பாண்டியன் முதலிய அனைவரும் பயந்து தர்மிக்கு பொன் மூட்டையை அளித்தார்கள்.

---

**ஆவணி மீ 30உ க்குள் தயைசெய்து தெரிவியுங்கள்.**

### நக்கீரரைக்காத்தது.

சிவனது நெற்றிக்கண் தாபம் கொளுத்த நக்கீரர் பொற்ருமரையில் மூழ்கி எழுந்தார். அங்கும் தாபம் அகலாமல் அவர் கஷ்டப்பட்டார். மற்ற புலவர்களும் அவரின்றி சபை நன்ருக இல்லையென கடவுளை வேண்ட பகவான் நக்கீரர் தாபத்தையகற்றி அவரைக் கரை ஏற்றினர்.

### நக்கீரருக்கு இலக்கணமுபதேசித்தல்.

நக்கீரருக்குப் பகவான் இலக்கணம் கற்பிக்க கருதினர். இதையறிந்த மீனுக்ஷி ஏற்கனவே தாங்கள் அகஸ்தியருக்கு உபதேசித்த இலக்கணத்தை அவரைக் கொண்டே கற்பிக்கலாமே என அங்ஙனமே செய்தார். அஸூயை கொண்டதால் தான் நேரில் உபதேசிக்காமல் அகஸ்த்தியரைக் கொண்டே உபதேசித்தார். நக்கீரர் தாம் எழுதிய பழைய நூல்களில் இலக்கண குற்றமிருப்பதைக் கண்டு திருத்தினர். குற்றமற புதிய கவிகளையும் பாடினர்.

### சங்கத்தார் கலகம் நீங்கியது.

நாற்பத்தெட்டு புலவர்களும் தனித்தனி கவிகள் எழுதி தங்கள் பாட்டையே சிறந்தது என எண்ணி கலகம் செய்தார்கள். பகவானிடமே சென்று இதில் உயர்ந்ததைக் கூற வேண்டும் என வேண்டினர்கள். பகவான் நேரில் தோன்றி வணிகர் தெருவில் தனபதி குணசாலினீ என்பவர்களின் புத்திரன் ஊமையாக இருக்கின்ருன். அவனிடம் செல்லுங்கள் என்று கூறினர். அனைவரும் அங்கு சென்று தம்தம் பாடல்களைப்பாட அவன் சிலதை இகழ்ந்தான். சிலதை புகழ்ந்தான். நக்கீரர் கபிலர் பாணர் என்ற மூவர் பாட்டைக்கேட்டு ஆனந்த கண்ணீர் சொறிந்தான். அதைக் கண்டு புலவர்கள் கலஹம் தீர்ந்து வீடு சென்றனர்.

### இடைகாட்டான் கவலை தீர்ந்தது.

பாண்டிய பரம்பரையில் குலேச பாண்டியன் ஆக்ஷியில் இடைக்காட்டுப் புலவன் என்பவன் தம் பாட்டுக்களை காட்டி அரசனிடம் சன்மானம் பெறவந்தான். பாட்டுக்கள் நன்ருக விருந்தும் பொருமையினுல் அரசன் தலையைக்கூட

---

அசைக்காமல் உட்கார்ந்திருந்தான். அப்புலவன் பகவானிடம் முறையிட அவர் மதுரை கோயிலிலிருந்து புறப்பட்டு வைகையின் வடபுறம் சென்று அமர்ந்தார். அரசன் ஆண்டவனைக் காணுமல் ஆங்காங்கு அலைந்து திரிந்து பகவான் இருப்பிடம் சென்று பணிந்து நானெருகுற்றமும் செய்யவில்லை என பாட்டுக்களால் துதித்தான். பாட்டைக் கேட்டு ஸந்தோஷமடைந்த பகவான் இடைக்காட்டனை நீ அவமதித்ததால் இங்ஙனம் வந்தோம் என்ருர். அவர் தங்கியவிடம் "உத்தர ஆலவாய்" எனப் பெயர் பெற்றது. பாண்டியன் அப்பண்டிதரை அழைத்துப் பாட்டுக்களைக் கேட்டு சிறந்த ஸம்பாவனை செய்தான்.

### வலை வீசிய கதை.

சுந்தரேசன் மீனுக்ஷிக்கு வேதத்தின் ரஹஸ்யத்தை உபதேசித்து வரும்போது ஊக்கமில்லாமல் இருந்தாள். கோபங்கொண்ட பகவான் மீனுக்ஷியை மீன் பிடிப்பவன் மகளாக பிறக்கும்படிச் சபித்தார். அவள் காலில் விழுந்து மன்னிக்கும்படி வேண்ட தானே சம்படவனுகவந்து அவளை மணப்பதாகக் கூறிஞர். அச்சமயம் அருகிலிருந்த குகனும் கணபதியும் இந்த நூலிஞல் அல்லவோ தன் தாயிக்குச் சாபம் நேர்ந்தது என சிவபோதம் என்னும் நூலை கடலில் கட்டி எறிந்தார்கள். சிவன் குஹனை ஊமை வைச்யன் மகனுக ஆகும்படியும் அவர்களை உள்ளே விட்ட நந்தியை ஒரு துஷ்ட மீனுகும்படியும் சபித்தார். மீனுக்ஷி ஒரு சம்படவராஜன் மீன் பிடிக்கும்பொழுது அவன் முன் ஓர் சிறிய கன்னிகையாகத் தோன்றிஞள். அழகிய அப்பெண்ணை எடுத்து அவன் வளர்த்து வந்தான்.

நந்தியும் மீனுகப்பிறந்து ஒருவர்கையிலும் அகப்படாமல் ஜலத்தில் வருபவர்களை ஹிம்ஸித்து வந்தார். சம்படவராஜன் தன்னுலும் அதை பிடிக்க முடியாததால் அதை பிடிப்பவருக்கு தன் மகளைத் தருவதாகக் கூறிஞன். சுந்தரேசன் மீனுக்ஷிக்கு வாக்களித்தபடி தான் ஒரு சம்படவனுக தோன்றி அம்மீனைப் பிடித்து அவளை மணந்து ஆலயத்துள் சென்று மறைந்தார். நந்தியின் சாபம் அகன்றது. குகனும் புலவர் சண்டையை அகற்றியபின் சாபத்திலிருந்து விடுபட்டார்.

---

**வைத்தியப் பகுதி.**

# ஆயுர் வேதம் (10)

Dr. V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.,
1/3, A. D'Sylva Road, Mylapore, Madras-4.

**நெல்லிக்காயின் பிரயோகங்கள்.** (ஆடிமீ தொடர்ச்சி)

*(4)* ரக்தம் அதிகமாகப் போகும் மூல ரோகத்தில், தயிரின் தெளிவு நீரில் வேகவைத்த நெல்லிக்காயை (இரண்டு அல்லது மூன்று) ஒவ்வொரு தினமும் அருந்தவும். *(5)* பிரதரத்தில் (மாதவிடாய் அதிகமாகப் போதல்) நெல்லிக்காய் பருப்பை சூர்ணித்தாவது, கல்பமாக அரைத்தாவது அரை தோலா தினம் இருமுறை தேன், சர்க்கரைச்சேர்த்து உட்கொள்ளவும். *(6)* ரக்த பித்தத்தில், நெல்லிக்காய் ரஸம் அல்லது ஸ்வரஸம் ஒரு அவுன்ஸில் 20 கிரேய்ன்ஸ் மஞ்சள் தூள் சேர்த்து தினம் இருமுறை எடுத்துக் கொள்ளவும். *(7)* பாண்டு ரோகத்தில் நெல்லி ரஸம், கரும்பு ரஸம், தேன் சமபாகம் கூட்டிக் கலந்து மத்தினுல் கடைந்து இரண்டு அவுன்ஸ் தினம் இருமுறை சாப்பிடவும். *(8)* **ச்யவன பிராஸ ரஸாயனம் (அவலேஹ்யம்)** கழற்சிக்காய் அளவு தினம் இருமுறை சாப்பிட தாது க்ஷயம், வயோதிகத்தாலுண்டாகும் பல ஹீனம், நாட்பட்ட ஸ்வாஸ காஸரோகம், இருதய ரோகம் இவைகளைச் சமனப்படுத்தும். ஞாபகசக்தியும் தேஹ காந்தியுமதிகரிக்கும். *(9)* **பிருங்காமலக தைலம்.** தலைக்குத் தேய்த்து ஸ்நாநம் செய்ய தலையிலும் கண்ணிலும் உண்டாகும் பலவித வியாதிகள் போம். தேகக் குளிர்ச்சி உண்டாகும். *(10)* **பிருங் ராஜ தைலம்.** இதைத் தலைக்கு உபயோகிக்க அகாலத்திலுண்டாகும் நரைமயிர், செம்மட்டை மயிர், மயிர் உதிர்தல் இவைகள் போய், கூந்தல் கருத்து நீண்டு வளரும்.

கடைசியில் கூறிய (8, 9, 10) மூன்று யோகங்களை, நம்பகமான மருந்து கடைகளில் வாங்கிக்கொள்ளலாம். சாத்தியமானுல் வீட்டிலும் தயாரித்துக் கொள்ளலாம். செய்முறை கீழே தரப்பட்டிருக்கிறது.

---

**உங்கள் சந்தா நம்பரையும் விலாசத்தையும்**

**ச்யவன பிராஸாவலேஹ்யம்** — தசமூலம் - திப்பிலி - கடுக்காய் - ஏலக்காய் - செஞ்சந்தனம் - அகில் கட்டை - நெரிஞ்சல் - கண்டங்கத்திரி - கடுக்காய்ப்பூ - கீழாநெல்லி - சீந்தல் கொடி - சிற்ருமுட்டி - சாட்டறணை - ஆடாதொடை வேர் - திராக்ஷை - அமுக்கிராங்கிழங்கு - கோரைக் கிழங்கு - பூலாங் கிழங்கு - அல்லிக் கிழங்கு - தண்ணீர் விட்டன் கிழங்கு - தாமரைக் கிழங்கு - நிலப்பனங் கிழங்கு - பூமிசக்கரைக் கிழங்கு - நிலப் பூசனிக் கிழங்கு (தசமூலம் - சிற்ருமல்லி - பேருமல்லி - கண்டங்கத்ரி - சிறுவழுதுணை - நெரிஞ்சல் - வில்வவேர் - தழுதாழை வேர் - பெருவாகைவேர் - பெருங்குமிழிவேர் - பாதிரி வேர்) இந்த 33 சரக்குகளை வகைக்கு அரைபலம் எடுத்து நன்ருக இடித்து 12 படி ஜலம் விட்டு இரண்டுநாள் ஊற வைத்து, மூன்ரும் நாள் அத்துடன் 250 பெரிய நெல்லிக் காய்களைப் போட்டு அடுப்பேற்றி 3 படி கஷாயமாக சுண்டிய பின், அதிலுள்ள நெல்லிக்காய்களை எடுத்து, கொட்டைகளை நீக்கிப்பிழிந்து, திப்பியை 3 பலம் நெய் யில் சிறு அக்னியில் வறுத்தெடுத்துக் கொள்ளவும். முன்னர் காய்ச்சிய கஷாயத்தை வடிக்கட்டி, அதில் 50 பலம் சீனு கற்கண்டு சேர்த்து பாகு காய்ச்சி, அத் துடன் வறுத்த நெல்லித்திப்பியைக் கூட்டவும். இத்துடன் மூங்கிலுப்பு, திப்பிலி, இலவங்கப்பட்டை, ஏலம், இலவங் கப்பத்திரி, சிறுநாகப்பூ ஆகியவைகளை இடித்து வஸ்திர காயம் செய்த சூர்ணத்தைப் போட்டுக் கிண்டி, நெய் 5 பலம், நல்லெண்ணை $6\frac{1}{4}$ பலம், விட்டுக் கிளறி ஆறின பின்பு, தேன் $6\frac{1}{4}$ பலம் சேர்த்துக் குழப்பி எடுத்துக் கொள்ளவும்,

**பிருங்காமலக தைலம்:** பொன்னுங்கண்ணி - நெல்லிக் காய் - கரிசிலாங்கண்ணி இவைகளின் சாரும், பசும் பாலும், நல்லெண்ணையும் வகைக்கு ஒருபடி கலந்து எடுத்துக்கொண்டு, அதிமதுரம், வெட்டிவேர், விலாமிச்ச வேர், சந்தனம், கோஷ்டம், பேரரத்தை, கடகரோகிணி, கோரைக்கிழங்கு வகைக்கு ஒரு பலம் சூர்ணித்து கல்க மாக்கி, மேற்கலந்த சாருடனும் எண்ணையுடனும் சேர்த்து பாகத்தில் தைலம் காய்ச்சிக்கொள்ளவும்.

---

**பிருங்க ராஜ தைலம்:** கரிசலாங்கண்ணி சார் 1படி, நல்லெண்ணை 1 படி, இவைகளைக் கூட்டி, திரிபலா (கடுக்காய் - நெல்லிக்காய் - தான்றிக்காய்) - நன்னாரி - இரும்பு சிட்டம் வகைக்கு 1 பலம் சூர்ணம் செய்து கல்கமாக அரைத்து, மேற்கலந்த சாரும் எண்ணெயுடனும் சேர்த்து பாகத்தில் தைலம் காய்ச்சவும்.

யுனானி வைத்தியத்தில் நெல்லிக்காயை, சர்க்கரைப் பாகில், முரப்பாவாக தயாரிக்கப்படுகிறது. இது கடைகளில் கிடைக்கும். உட்கொள்ள ருசியானது. வீர்யம் உடையது.

நவீன வைத்ய முறையில், நெல்லிக்காயை நேரில் உபயோகிக்கப்படாவிட்டாலும், அதன் சத்து பல வியாதிகளில் உபயோகப்படுகிறது. அதற்கு **வைடமின் ஸி** எனப் பெயர். இதே சத்து தான் ஆரஞ்சுபழம், டோமேடோஸ் முதலிய பழங்களில் உள்ளது. ஆனால் நெல்லிக்காயில் அது நிரம்பி இருக்கிறது. வைடமின் ஸி இரக்தம்-எலும்பு - பற்கள் இவைகளின் வளர்ச்சிக்கு உபயோகம். தொத்து வியாதிகளின் வேகத்தைத்தடுக்கும். ஈரில் ரக்தம் காணும் ஸ்கர்வி என்ற வியாதி, சொத்தைப்பல், பாண்டு இவைகளுக்கும் நல்லது.

**குறிப்பு :–** ஜ்வர சிகித்ஸையில் கூறப்பட்ட நவீன மருந்துகளில் க்வினின் ஸல்பேட் என்ற மருந்துக்குப் பதிலாக குழந்தைகளுக்கு ஈக்வினின் என்ற ருசியில்லாத க்வீனினை, வயதுக்கு ஏற்றபடி 1–5 கிரய்ன்ஸ் வரையில் தேனில் குழைத்தோ, பாலில் கலக்கியோ கொடுக்கலாம்.

இனி அதிஸாரத்தைச் சார்ந்த வியாதிகளின் தடுக்கும் முறைகளையும், சிகித்ஸைகளையும் கவனிப்போம். ஆகார விஹாரங்களைச் சரிவர நடத்திவந்தால் அதிஸாரம் முதலிய நோய்கள் அணுகாது. இங்கு திருவள்ளுவர் கூறும் இரண்டு குறள்களில் காணப்படும் விதிகள் மிக்க பயன் தருவன. "அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல, துய்க்க துவரப் பசித்து." (முன் உண்ட உணவு செரித்த தன்மையை அறிந்து மாறுபாடில்லாத உணவுகளைக்

---

கடைப்பிடித்து அவற்றையும் நன்ருகப் பசித்த பிறகு உண்ண வேண்டும்.) '' மாறுபாடில்லாத வுண்டி மறுத் துண்ணின், ஊறுபா டில்லை வுயிர்க்கு.'' (மாறுபாடில்லாத உணவை அளவு மீருமல் மறுத்து அளவோடு உண்டால், உயிர் உடம்பில் வாழ்வதற்கு இடையூருன நோய் இல்லை.) சந்தேகமான சந்தர்ப்பங்களில் பழைய ஆகாரத்தையும் கொதிக்க வைக்காத தண்ணீரையும் உட்கொள்ளக் கூடாது. பல சமயங்களில் அதிஸாரம் மற்ற வியாதி களின் குறி குணங்களாக வருமாதலால், தேகத்தை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ளுதல் அவசியம்.

எல்லாவித அதிஸாரத்திலும் லங்கணம் நல்லது. ஒரு நாள் முழு பட்டினி இருக்கலாம். முடியாவிடில், அரிசி, ரவை, சவ்வரிசி, அரரூட் மாவு இவைகளின் ஏதாவது ஒன்றைக் கஞ்சியாகக் காய்ச்சி கொஞ்சம் பால் சர்க்கரைச் சேர்த்து உட்கொள்ளவும். பால் சர்க்கரைக்குப் பதிலாக மோர் உபயோகிக்கலாம். இவை யொன்றும் பிடிக்கா விடில், குளுகோஸ் கரைத்த நீரையும், சாத்துக்குடி பழ ரஸத்தையும் குடிக்கவும். பேதி குறைந்து வரும்போது ஆகாரத்தை ஜாக்கிரதையாக அதிகப்படுத்த வேண்டும்.

பேதி அதிகம் இராமலிருந்தால், ஆமணக்கெண்ணை (ஒரு அவுன்ஸ்) காலையில் சாப்பிட 4-5 தரம் பேதியாகி பிறகு நின்றுவிடும். இம்முறை குழந்தைகளுக்கும் ஏற் றது. வயதுக்குத் தக்கபடி எண்ணை போட்டவேண்டும். பொதுவாக அதிஸாரத்தை உடனடியாக நிறுத்துவது சரியல்ல. ஜீர்ணசக்தியை அதிகரிக்கச் செய்யவேண்டும். இதற்குக் கீழ்க்கண்ட மருந்துகள் தோஷத்திற்குத் தக்க வாறு தரப்பட்டுள்ளன.

***வாததோஷம்:*** *(1)* பிஞ்சுக்கடுக்காய் சூர்ணம் 60 கிர. அல்லது *(2)* வைஶ்வானர சூரணம் (இந்துப்பு 1, குவி சானி ஓமம் 2, ஓமம் 3, திப்பிலி 4, சுக்கு 5, கடுக்காய்த் தோல் 15) 30-60 கிர. நெய்யுடனுவது, வெந்நீரிலாவது தினம் இருமுறை சாப்பிடவும். *(3)* சுக்கு, கடுக்காய், வாய்விடங்கம், வசம்பு, வட்டத்திருப்பி, பிடாலவனம் சமயிடை, கஷாயம் 1 அவு. தினமிருமுறை.

---

# விநாயக புராணம்.

ஶிவன் ஸிந்தூரனைப் பார்த்து உயிருடன்வாழ விரும்பினால் உமையை விடு அல்லது போருக்குவா என்றார். ஸிந்தூரன் கொசுவுடனா மேருமலை போர் தொடுக்கும்? நீ வேறு மனைவியை மணம் செய்து தவம் செய், என வீர வாதம் செய்தான். இதைக்கேட்டு அஞ்சிய அன்னை மயூரேசனை த்யாநம் செய்தாள். உடனே அவர் ஒரு பிராம்மணச் சிறுவன் வேஷந்தாங்கி இருவருக்குமிடையில் பரசுவைக் கண்ணுக்குத் தெரியாமல் இருக்கும்படி செய்து நின்றார். அஸுரேந்த்ர! நீங்கள் இருவரும் யுத்தம் செய்யுங்கள். ஜயித்தவரிடம் உமையை அளிப்போம் என்றார். இருவரும் அதை ஏற்று போர் துவக்கினர். கடும்போர் நிகழ்ந்தது. ஜயலக்ஷ்மி யாரிடம்செல்வதென அறியாமல் அலைந்தாள்.

அஸுரன் இருகரங்களாலும் சிவனைத் தழுவி கொல்லக் கருதினான். விநாயகரது ஆணையின்படி பரசு ஸிந்தூரனை அடித்து துர்பலனாக்கிற்று. அச்சமயம் சிவன் சூலத்தினால் அவனைத் தாக்க ஸிந்தூரன் தோல்வியுற்றான். முன் கூறியபடி உமையைச் சிவனிடம் தந்து, ஸிந்தூர! சிவபெருமையை நீ அறியாய்! அவர் விரும்பினால் உன்னைச் சாம்பலாக்கி இருப்பார். வரத்தின் பயனைப் பெற்று சிறிது காலம் வாழ்ந்திரு நீ எனக் கூறி அனுப்பினார். பார்வதி, ஐயா! ஸமயோசிதமான செயலால் என்னைக் காத்தருளிய தாங்கள் யாரோ? என்றாள். அன்னையே! நீ வேண்டிய மயூரேசனே நான் என தனது ஸ்வரூபத்தைக் காட்டினார். தேவி ஆநந்தமடைந்து போற்றினாள். உனது புத்ரனாகவே இப்பொழுதும் அவதரித்து ஸிந்தூரனைக் கொல்வேன் எனக் கூறி மறைந்தார்.

ஸிந்தூரன், இந்த்ரன் எண்திசை பாலகர் அனைவரையும் ஜயித்து பாதாளம்சென்றான். ராக்ஷஸ ஸ்வபாவத்திற்கேற்றப்படி ஸகல தேவர்களையும் ரிஷிகளையும் பஶு பக்ஷி மிருகங்களையும் ஹிம்ஸித்தான். பலர் பயந்து பதுங்கினர். சிலர் அடிபட்டிறந்தனர். தேவர்கள் ஒன்று கூடி இவனைக் கொல்ல என்ன உபாயம் என ஸுரகுருவை வேண்டினர். இச்சமயம் உண்டாயிருக்கும் எவராலும் இவனுக்கு மரணம் இல்லை. ஸகல லோக நாயகனான பிரணவ வடிவனான விநாயகனை ஆராதித்தால் அவர் சிவ

குமாரனாகத் தோன்றி அவனைச் சிக்ஷிப்பார் என்றார். பரம பக்தியுடன் அமரர் அனைவரும் ஒன்று கூடித் துதிக்க விநாயகர் திவ்ய மங்கள வடிவத்துடன் அவர்கள் முன்னே தோன்றினர். உங்கள் குறையை அறிவேன். விரைவில் ஸிந்தூரனைக் கொன்று உங்களுக்கு இன்பம் தருவேனென்று கூறி மறைந்தார். சிலநாட்சென்றபின் பார்வதீ தேவியினது குக்ஷியில் தனது தேஜஸ்ஸை அனுப்பினர். தேவி கர்ப்பிணியாகி அந்த உஷ்ணத்தை ஸகிக்கமுடியாமல் சீதளமான இடத்துக்கு அழைத்துச் செல்லுங்களென பகவானை வேண்டினாள். விருஷபாரூடனான சிவன் தேவியுடன் ஆங்காங்கு சென்று பர்யலீ எனும் காநகத்திற்கு வந்தார். அது தேவியின் விருப்பத்திற்கிணங்க மிக அழகாயும் சீதளமாயும் இருந்தது. ஒன்பதாவது மாஸத்தில் பகவான் தேவியின் முன்னே பரமாத்ம ஸ்வரூபனாகத் தோன்றினர். அதைக்கண்டு ஆச்சர்யமடைந்த அன்னை, தாங்கள் யார்? எனக்கு குழந்தையல்லவோ பிறக்குமென எதிர்பார்த்தேன் என்றாள். பகவான், நான் நீ வேண்டிய விநாயகன். நிஜ ரூபத்தைக் காட்டவே இங்ஙனம் தோன்றினேன் என்று கூறி உடனே யானைமுகனான சிறு குழந்தையாக மாறினர். வரேண்ய மகாராஜனிடம் என்னைக் கொண்டு விடு. அவனுக்குத் தத்துவோபதேசம் செய்து ஸிந்தூர அஸுரனைக் கொன்று எனது ஆநந்த புவநம் செல்வேன் என்றார். குழந்தையை விட்டு பிரிய மநமில்லாவிடினும் அவர் ஆக்ஞையின்படி நந்தி மூலமாக அவரை வரேண்யனிடம் அனுப்பினாள். ஆகாய மார்க்கமாக அவர் குழந்தையுடன் செல்லும் பொழுது ஸிஸு பக்ஷிணீ எனும் அரக்கி ஒரு குழந்தையைப் பக்ஷித்துக் கொண்டிருந்தாள். அவள் ஒருஸமயம் இக்குழந்தையையும் பக்ஷிக்கவரலாமோ என எண்ணி நந்தி வாலால் ஓங்கி அவளை அறைந்தார். அவள் உடனே உயிர் துறந்தாள்.

வழியில் மஹா பயங்கரமான ஒரு கந்தர்வ கோஷ்டி வழி மறித்தது. பரமசிவனைப் பணிந்து மநதால் போற்றி சிலரைக் கொம்பாலும் சிலரை வாலாலும் சிலரைக் கால்களாலும் சிலரை ஹுங்காரத்தாலும் கொன்று மேலே சென்றார் நந்தி. தேவர்கள், புஷ்பமாரிப் பொழிந்து வாழ்த்தினர். மாஹிஷ்மதீ என்ற நகரத்தில் வரேண்யன்

என்ற அரசன் மநுநீதி தவருமல் ராஜ்யபாரம் செய்து வந்தான். பரம தார்மிகனுன அவனுக்கு உத்தம பதி விரதையான புஷ்பிகா என்ற பத்நி இருந்தாள். தெய்வ பக்தி தானதர்மம் யாகம் முதலிய நற்கருமங்களில் ஈடு பட்ட அவர்களுக்கு புத்ரபாக்யம் மாத்ரமில்லே. பனி ரண்டாண்டுகள் கடுந்தவம் புரிந்தனர். இறைவனருளால் ஒரு குழந்தை பிறந்தது. அது பிறந்தவுடன் ராக்ஷஸர் அதைத்தூக்கிச் சென்றனர். அவர்களுக்கு தான் புத்ர ஞவதாக பகவான் கூறினமையால் ஒருவருமறியாமல் நந்தி பகவான் உத்தரவுபடி விநாயகரை புஷ்பிகையினி டம் கொண்டுவிட்டு திரும்பினுர்.

இது இப்படி இருக்க ஸிந்தூரன் என்ற ராக்ஷஸன் மந்த்ரி ஸேநாதிபதி முதலியவர் கூடிய ஸபையில் எழுந்து வீரர்களே! எனது வீர்யத்தைக் கண்டீர்களா? ஸகல தேவர்களும் என்னைக்கண்டு பயந்து ஓடுகின்றனர். எனது தெனேவைத் தீர்த்துக் கொள்ள ஓரிடமுமில்லேயே! என கர்வங்கொண்டு கர்ஜித்தான். அஸுர! வீண் கர்வத்தைவிடு. உன் கர்வத்தை அடக்கிக்கொல்ல கைலாஸநாதனிடம் ஒரு குழந்தை பிறந்திருக்கிறது! என்று ஒரு அஶரீரியான வாக்கு தோன்றிற்று. இதைக் கேட்டு ஸிந்தூரன் நமக்கும் மரணமா? என சிறிது நேரம் சிந்தை கலங்கினுன். கோபங்கொண்டு பார்வதீ பரமேஶ்வரர்களேயும் அவர் பாலகனேயும் கொல்வே னென கைலாஸம் சென்ருன். அங்கு அவர்களைக் காணு மல் எங்கு சென்றனர் என விசாரித்துக்கொண்டு அவர் களிருக்கும் பர்யலீ எனும் வநத்திற்கு வந்தான். அங்கே உமயவளை மாத்ரம் கண்டான். இவளது மகனல்லவோ என்னேக்கொல்வானும்! முதலில் இவளைக்கொல்கிறேன் என கத்தியைத் தூக்கினுன். உடனே அன்னே அருகில் அத்புதமான ஒரு ஶிஶு தோன்றக் கண்டான். அது தான் தனக்குக் காலன் என எண்ணி அதைத் தூக்கிக் கடலில் எறிய எண்ணினுன். ஆனுல் மலேபோல் கனமாக இருந்த அக்குழந்தையைச் சுமக்கமுடியாமல் பூமியில் எறிந்தான். அந்த இடத்தில் கணேஶகுண்டம் என்ற ஒரு தீர்த்தம் தோன்றிற்று. அதை நினேத்தாலேயே பிறவி முதல் செய்த பாபமகலும். தர்ஶித்தால் பத்து ஜன்ம பாபங்களும் அகலும். அதை ஸேவித்தவர் முக்தியைப்

பெறுவர். பகவான் விழுந்தபோது உண்டான ரத்தத்தால் இன்றைக்கும் அந்த ஜலம் செவப்பாகவே இருக்கின்றது. அங்கு விழுந்த பயங்கரமான அக்குழந்தையை ஸிந்தூரன் கத்தியால் வெட்ட ஆரம்பித்தபொழுது அது ஆகாசத்திற் சென்று மூட! உன்னைக் கொல்பவன் வேறிடத்தில் வளருகிருன் என்று கூறி மறைந்தது. அது அப்படியிருக்க.

வரேண்யன் மனைவி தன் அருகே திடீரென அழும் ஒரு குழந்தையைக் கண்டாள். அது நாலுகரங்களுடன் பயங்கரமான ரூபத்துடன் இருந்தது. பயங்கரமான அழுகைக் குரலையும் கேட்டு அரசனும் மஹிஷியும் பயந்தார்கள். இதென்ன விந்தை? இது குழந்தையா? எங்கும் எவரும் இதைப்போன்ற சிசுவைக் கண்டதும் இல்லை. கேட்டதுமில்லை! நமது ராஜ்யத்திற் கேற்ற குழந்தை அல்ல இது! என்றெண்ணி இதைக் காட்டில் கொண்டு விடும்படி உத்தரவிட்டார். காட்டில் ஒரு ஓடையின் அருகில் இக்குழந்தையை வைத்து அதை இலைகளால் மூடிவிட்டுத் திரும்பினர் அரசனது வேலைக்காரர். அதை ஒரு நரி கடித்துத்தின்ன வந்தபோது தற்செயலாக பராஸர முனிவர் வந்தார். இக்குழந்தையைக் கண்டு ஆஸ்சர்யமடைந்தார். இக்குழந்தை யார்? நமது தவத்தைக் கெடுக்க இந்த்ரன் செய்த மாயையா? இதன் பெற்றோர் யார்? அநாதையாக உள்ள இதை நாம் எடுத்து வளர்ப்பது தர்மமா? இதை விட்டுச் செல்வது பாபமல்லவா? என தனக்குள்ளேயே வெகு நேரம் யோசித்தார். கருணைக் கடலான கஜாநநன் இவருக்குத் திவ்ய க்ஞாநத்தைத் தந்தார். உண்மையை அறிந்து நமது பாக்யமென இருகரங்களாலும் வாறி எடுத்து மார்போடணைத்து மனைவியிடம் அளித்தார். அவளும் உண்மை உணர்ந்து பாலூட்டி குழந்தையை வளர்த்து வந்தாள்.

குழந்தை ஆஸ்ரமத்தில் வளரும் போது ஒருநாள் மிக பயங்கரமான பெருச்சாளி ஒன்று ஆங்குள்ளவர்களைக் கடித்தும் வாலாலடித்தும் மரம் செடிகளை முறித்தும் பலவகையாக ஹிம்ஸித்து வந்தது. பரம ஸாந்தர்களான பராஸரர் போன்ற முனிவர், என் செய்வது? எங்கு செல்வது? என அறியாமல் தவித்தனர். குழந்தை

கஜாநநன், அப்பா! அஞ்சவேண்டாம். துஷ்டர்களைச் சிக்ஷிப்பதற்காக அல்லவா நான் இங்கு வந்துளேன், என்று கூறி தனது பாஶத்தை அதன் மீது ஏவினார். அது மின்னல் கொடிபோல் ஜ்வலித்துக்கொண்டு மூஷிகத்தைத் துறத்த அது பாதாளம் சென்றது. அங்கும் சென்ற பாஶம் அதைக்கட்டி கஜாநனிடம் இழுத்து வந்தது. அவரது திவ்ய மங்கள உருவைக் கண்டவுடன் பகவானைத் துதித்தான். கருணா மூர்த்தியான கஜாநநன் உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்! என்றார். கர்வங் கொண்ட மூஷிகம் நான் உமக்கு வரம் தருகிறேன். உமக்கென்ன வேண்டும் என்றான். ஆனால் நீ எனக்கு வாஹநமாக இரு என்று குழந்தை அதன்மீது ஏறினார். பெற்றோர் அஞ்ச மற்றோர் ஆஶ்சர்யப்பட மூஷிகம் அவர் பலத்தைப் பரீக்ஷிக்கக் கருதிற்று. அதை அறிந்த பகவான் மலைபோல் மிக்க பாரம் உள்ளவரானார். அவரைச்சுமக்க முடியாமல் உடல் தளர்ந்து மநம் நொந்து அவரைத் துதித்து மன்னிக்கும்படிவேண்டிற்று மூஷிகம். பகவான் அதன் வாலில் கயிற்றைக்கட்டி குழந்தைபோல அத்துடன் விளையாடிக்கொண்டிருந்தார்.

அதற்கு எதனால் இந்த பாக்யம் கிட்டிற்று? என்று வியாஸர் கேட்க பிரும்மா கூறினார். அது முற்பிறவியில் க்ரௌஞ்சன் எனும் கந்தர்வன். ஒரு ஸமயம் வாமதேவர் எனும் முநிவரைக் காலால் இடறிக்கொண்டு ஓடினான். அவர் நீ மூஷிகமாக ஆவாய் என சபித்தார். அன்றியும் அவன் ஒருநாள் மேருமலையில் வஸிந்து வந்த ஸௌபரி மஹரிஷியின் ஆஶ்ரமத்திற்குச் சென்றான். அச்சமயம் அவர் வெளியில் சென்றிருந்தார். அழகிற் சிறந்த மநோமயீ எனும் அவர் மனைவியைக் கண்டு இச்சை கொண்டான். அவள் எவ்வளவோ தர்மங்கூறியும் கேட்காமல் அவளைப் பலாத்காரம் செய்தான். அவள் மூர்ச்சையாகி விழ, அதிர்ஷ்டவஶமாக வெளியில் சென்ற ஸௌபரி திடீரென வந்து உள்ளே நுழைந்தார். இவன் செயலை அறிந்து மூஷிகமாகும்படி அவரும் அவனை ஶபித்தார். இருவர் ஶாபமும் சேர்ந்தது. அதனால் க்ரௌஞ்ச கந்தர்வன் மூஷிகமாகி பகவானைச் சுமந்து சென்றான். கந்தர்வனாக இருந்தபோது அவன் செய்த பக்தியே இதற்குக் காரணம்.

ஸிந்தூரவதத்தைப் பற்றி கேட்க பிரும்மா கூறினர். ஸிந்தூராஸுரன் செய்யும் கொடுமையால் தேவரும் முனிவர்களும் வருந்தினர். கஜாநனே த்யாநம் செய்து அவனைக் கொல்லும்படி வேண்டினர். பகவான் ஒருநாள் பராமரரை வணங்கி ஸிந்தூரனைக் கொன்றுவர தனக்கு உத்தரவு அளிக்கும்படி வேண்டினர். இதைக் கேட்டு நடுங்கி, முனிவர் குழந்தாய்! நீ சிறுபாலன். அவனே அனைவரையும் நடுங்கும்படி செய்பவன். எப்படி உன்னை நான் அனுப்புவேன்? என வருந்தினர். தந்தையே! என்னை நீர் யார் என இன்னும் அறியீரா? எனது பிரஸில் உமது ஹஸ்தம்படுவது ஓர் வியாஜம். அதனல் ஸகலரையும் ஜயிப்பேன் என்றூர் கஜாநநன். தந்தை அங்ஙனமே ஆசீர்வதிக்க கௌரியை மநதால் நினைத்துக்கிளம்பினூர் கஜாநநன். குஸ்ருணேமவர ஸன்னதியில் ஸிந்தூரன் தனது ராஜ்யத்தை அமைத்துக் கொண்டிருந்தான். பகவான் மூஷிகத்தின் மீதமர்ந்து பாமாங்குமங்களை ஏந்தி அங்கு சென்று கர்ஜித்தார். அதைக்கேட்டு பல ராக்ஷஸ வீரர்கள் மூர்ச்சித்தனர். பலர் இறந்தனர். அவ்வூரில் பல உத்பாதங்கள் தோன்றின. அதன் காரணத்தை அறிய தூதர்களை அனுப்பினுன் ஸிந்தூரன்.

அவர்களிடம், பகவான் தான் அவதரித்த கார்யத்தைக் கூறி உயிர்வாழவேண்டுமானல் தன்னைப் பணிந்து எவர்க்கும் தீங்கிழைக்காமல் பாதாளம் செல், என உன் யஜமாநனுக்குத் தெரிவி என்றூர். இதைக்கேட்ட ஸிந்தூரன் அடங்காக் கோபங்கொண்டு நான்கு வயது ரிஷிச்சிறுவனே என்னைச் சரணம் அடையக் கூறுவது? ஒரு நிமிஷத்தில் அவனைக் கொன்று திரும்புகிறேன் என்று கிளம்பினுன். எண்ணிறந்த சேனு வீரர்கள் பின் தொடர ஸிந்தூரன், அவரிடம் சென்று ஓ குழந்தாய்! இது உனக்குப் பால் குடித்து விளையாடும் காலம்! முவ்வுலகையும் ஜயித்த வீரனுடனு போர் துவக்கத் துணிந்தாய்? என வீரவாதம் பேசினுன். வயதிலும், உருவிலும் சிறியவன் என அலக்ஷ்யம் செய்யாதே. தைர்யமிருந்தால் போருக்குவா, ஜயம் அல்லது இறந்து வீர ஸ்வர்க்கம் பெறுவாய் என்றூர் கஜாநநன்.

அஸ்த்ரங்களுக்கு ப்ரத்யஸ்த்ரம் வர்ஷித்து உலகெலாம் நடுங்கும்படி இருவர்க்கும் போர் நடந்தது.

அஸுர ஸேனைகளைக்கொன்று பிணமலையும் ரத்த ஆறும் ஓடும்படிச் செய்தார் கஜானனர். கடுங்கோபங்கொண்டு ஸிந்தூரன் பற்பல அஸ்த்ர ஶஸ்த்ரங்களால் பகவானைத் தாக்கினான். கஜானனன் உலகெலாம் வியாபித்து நிற்கும் உக்ரமான விஶ்வரூபமெடுத்தார். ஸுராஸுரநரர் அனைவரும் நடுங்கி அவரைப் போற்றினர். ஸிந்தூரனைக் கரங்களால் பிடித்து இழுத்து ஒரு நிமிஷத்தில் வதம் செய்தார். அவனது உடலிலிருந்து ஸிந்தூரம் இவர்மீது பரவ அதனால் இவர் ஸிந்தூர கணபதி என அழைக்கப் பட்டார். ஸகல தேவர்களும் பகவானைத்துதித்து ஷோடஶ உபசார பூஜைசெய்தனர். அங்கு ஓர் ராஜஸதநமெனும் கோயிலை அமைத்து அதில் ஸிந்தூரகஜானனனை ப்ரதிஷ்டை செய்து பூஜித்தனர். அந்த திவ்ய க்ஷேத்ரத்திற்குத் தற் செயலாக வந்த வரேண்ய மஹாராஜன் கஜாநனைக் கண் டார். துதிக்கையுடனிருந்ததால் இவர் ராஜ குமாரனல்ல என்று காட்டில் விட்ட குழந்தை இவரே? பராஶரரால் வளர்க்கப்பட்டு தேவ கண்டகனான ஸிந்தூரனைக் கொன் றார் என உணர்ந்து அவர் திருவடியில் விழுந்து தான் அறியாமல் செய்த குற்றத்தை மன்னிக்கும்படி வேண்டி னான். பகவான் தான் வந்த கார்யம் முடிந்ததால் ஆனந்த புவநம் செல்லக்கிளம்பினார். வரேண்யனும் மற்ற மஹர்ஷிகளும் அவரைப்பணிந்து தங்களுக்குத் தத்வோப தேசம் செய்ய வேண்டுமென பிரார்த்தித்தனர். பகவான் ஸகல ஶாஸ்த்ரார்த்த ரஹஸ்யங்களையும் அவர்களுக்கு உபதேசித்தார். அதே கணேஶ கீதை எனப்படும்.

## ஸ்ரீ கணேச கீதை.

*[10 அத்யாயங்கள். 414 சுலோகங்கள் கொண்டது.]*

வரேண்ய மஹாராஜாவின் ப்ரார்த்தனைக் கிணங்கி விநாயகர் கூறினார். யோக அம்ருதமயமான கீதையைக் கேள். யோகமென்பது பாதஞ்சல யோகமல்ல. லக்ஷ்மி யுடனோ, விஷயங்களுடனோ, புத்ராதிகளுடனோ, தாய் தந்தையர்களுடனோ சேருவது யோகமல்ல. பந்துமித் ராதிகளுடனோ, அஷ்டைஶ்வர்யங்களுடனோ, அற்புதமான ஸ்த்ரீயுடனோ, ராஜ்யத்துடனோ, யானை குதிரைகளுடனோ சேருவதும் யோகமல்ல. ப்ரியமான இந்த்ரலோகமோ,

சிவலோகமோ, ஸத்ய லோகமோ, வைகுண்டமோ செல்வதும் யோகமல்ல. சந்த்ர ஸூர்யாதிகளுடன் கூடுவதும் யோகமல்ல. யோகம் பலவகை என்று கூறுவார்கள். ஆசையற்று பசியை தாஹத்தை ஜயித்து யோகிகள் முவ்வுலகையும் வசமாக்கிக்கொண்டு ஸகல லோகங்களை யும் பாவனமாக்குகின்றார்கள். கருணை நிறைந்த அவர்கள் சிலருக்கு யோகத்தைக் கூறுகிறார்கள். பரமானந்தக் கடலில் சில ஜீவன் முக்தர்கள் மூழ்கிக் கிடக்கின்றார்கள். கண்ணை மூடி ஹ்ருதயத்திலுள்ள பரமாத்மாவை த்யானம் செய்கின்றார்கள். ஸகல பூதங்களையும் தன்னைப்போலவே நினைக்கின்றார்கள்.

பிறர் செய்யும் தீங்கைப் பொருட்படுத்தமாட்டார்கள். அத்தகையவர் லோகானுக்ரஹத்திற்காக பூமியில் ஸஞ்சரிக்கின்றார்கள். பெண்ணையும் பொன்னையும் ஸமமாகக் கருதி உடலை மாத்ரம் பரிக்கும் க்ஞானிகளில் சிலரை நாம் இன்றைக்கும் கண்ணால் காணலாம். சிவன், விஷ்ணு, சக்தி, ஸூர்யன் நான் எல்லாம் ஒன்றே என்று எண்ணும் யோகமே உத்தமமானது. நானே மும்மூர்த்திகளாக இருந்து உலகைப்படைத்து பரிபாலித்து ஒடுக்கி வருகிறேன். பஞ்சாயதன ரூபமுள்ள என்னை உள்ளபடியே பலர் அறியார். ப்ரஹ்மாமுதல் கொசு வரையில் உள்ள எல்லாம் நானே. நான் ஸாக்ஷியாய் இருப்பதால் யாதொரு கர்மாவும் என்னிடம் பற்றாது. பலமான சக்தி வாய்ந்த எனது மாயையில் அகப்பட்டு பலகோடி ஜன்மமெடுத்த பிறகு அழிவற்ற எனது ஸ்வரூபத்தை அடைகிறார்கள். வேதத்தில் கூறிய ஸ்வர்க்கம் முதலிய சுகம் தங்களுக்கேற்றபடி யக்ஞாதி கர்மாக்களைச் செய்து சிறிது போகத்தை அனுபவித்து மறுபடியும் ஜனன மரணங்களையே அடைகிறார்கள்.

அவரவர் வர்ண ஆஶ்ரமங்களுக்கு ஏற்ற கர்மாக்களைச் செய்து சிலர் ப்ரஹ்மார்ப்பணமாகச் செய்கின்றார்கள். கர்மாக்களை விட்டதனாலேயே முக்திபெற முடியாது. முதலில் கர்மாக்களைச் செய்து சித்த சுத்தியைப் பெற்று ஞானம் பெறவேண்டும்.

பசு புத்ரன் மனை மனைவி முதலிய ஸகல வஸ்துக்களிலும் என்னையே காணவேண்டும். சுகம், துக்கம்,

லாபம், நஷ்டம் முதலியவைகளால் ஸமமாக இருத்தல் வேண்டும். தேவர் முதலியவரிடமும், மலை, நதி, தீ முதலியவைகளிலும் என்னையே பார்ப்பவன் யோகமறிந்தவன் ஆவான். விவேகத்தால் இந்த்ரியங்களை அடக்கி உள்ளும் புறமும் ஆத்மாவையே த்யானம் செய்யவேண்டும். பலனைக்கோராமல் கர்மாவைச் செய்து க்ஞானம் பெறுவது ஸாமர்த்யமாகும். பரமனிடத்தில் அசஞ்சலமான புத்திகொண்டு மனதில் தோன்றும் ஆசையையெல்லாம் அடக்கி ஸுக துக்கங்களில் கலங்காதவன், **ஸ்திர புத்தி** எனப்படுவான். இந்த்ரியங்கள் மிக்க பலமுள்ளவைகள். கண்ட இடத்திற்கு மனதை இழுத்துச்செல்லும். அவைகளை அடக்கி மனதினால் ஸதா என்னையே த்யாநம் செய்வது யோகமாகும். விஷயத்தில் கொண்டபற்றுதலால் காமம் கோபம் முதலியவைகள் தோன்றி இவனைக் கெடுத்துவிடும்.

க்ஞானிகளுக்கு உலக விஷயம் இருள்போல் இருக்கும். அக்ஞானிகளுக்கு ஆத்ம ஸ்வரூபம் இருள்போல் இருக்கும். நதிகள் கடலில் விழுவதுபோல் எண்ணிறந்த ஆசைகள் மனதில் புகுந்தால் அவருக்கு ஶாந்தி இல்லை. ஆசையையும் அகங்காரத்தையும் விட்டு க்ஞானத்தில் ஆசை கொண்டு முக்தி பெறுவாய்.

## 2. கர்மயோகம்.

கர்மா த்யானம் இவைகளில் எனக்கு நன்மை தரக் கூடிய ஒன்றைக்கூறும் என்று வரேண்யன் வேண்டினான். விநாயகர் கூறினார். சிறிது ஞானமுள்ளவர்களுக்கு புத்தி யோகமும் மற்றவர்களுக்கு கர்மயோகமும் கூறப்பட்டன. நித்ய கர்மாவைச்செய்யாமல் ஞானியாக முடியாது. ஒரு ஸமயமும் ஒருவனும் ஒரு கர்மாவையும் செய்யாமல் இருக்கமாட்டான். இயற்கையின் குணம் மனிதனைப் பரவசமாக்கி ஏதேனும் கர்மாவைச் செய்யத் தூண்டும். கர்மாக்களை விட்டு விட்டு மனதினால் விஷயங்களை நினைத்திருப்பது பொய்யான ஆசாரமாம். மனதை அடக்கி கர்மாக்களைச் செய்திருந்தால் கர்மாவினால் பற்று ஏற்படாது. உலகை ஸ்ருஷ்டித்த பொழுது கர்மாக்களில் சிறந்த யக்ஞத்தை மனிதர்களுக்கு இஷ்டமானதைத் தரும் காமதேனுவாக அளித்தேன். யக்ஞத்தினால் தேவர்களை ஆராதித்தால்

அவர்கள் மழை முதலிய மனிதர்க்கு வேண்டியதைத் தருவர். தேவர்களால் அளிக்கப்பட்ட அன்னத்தை அவர்களுக்கு அளிக்காமல் தானே உண்பவன் திருடனுவான். தேவர்களுக்கு அளித்த மிகுதியை உட்கொண்டால் அது பாபங்களைப் போக்கும்.

அன்னத்தால் பிராணிகளும், தேவர்களால் அன்னமும், யக்ஞத்தினுல் தேவர்களும், வேதத்தினுல் யக்ஞமும் உண்டாகி உலகம் விருத்தியாகின்றது. இது சக்ரம்போல் இருக்கிறது. இந்த சக்ரத்தை அனுஸரிப்பவரே க்ஷேமம் அடைவர். க்ஞானியாய் இருந்தாலும்கூட கர்மாவைச் செய்ய வேண்டும். இல்லாவிடில் இவனைப் பார்த்து அக்ஞானிகளும் கர்மாவை விட்டு நாசம் அடைவர். கர்மாவினுல் ஆகவேண்டியது எனக்கு ஒன்றும் இல்லை என்றாலும் நான் கர்மாவை விடாமல் செய்கிறேன். அக்ஞானத்தினுல் உண்டாகும் குணங்களை விட்டு ஈஸ்வரார்ப்பணமாக கர்மாவைச் செய். கர்மாவை விட்டவர்கள் காம க்ரோதாதிகளுக்கு வசமாவார். ரஜோ குணம் தமோ குணங்களால் உண்டான காமக்ரோதங்கள் க்ஞானத்தை மறைத்து ஜனன மரணத்திற்கு ஆளாக்குகின்றது. ஆதலால் காம க்ரோதங்களை ஜயித்து, இந்திரயங்களை மனதிலும், மனதை புத்தியிலும், புத்தியை ஆத்மாவினிடத்திலும் சேர். இதை யறிந்து சத்ருவான காமத்தை ஜயித்து பரமபதம் அடைவாய்.

## 3. விக்ஞான ப்ரதிபாதன யோகம்.

ஸ்ருஷ்டி காலத்தில் த்ரீமூர்த்திகளைப் படைத்து விஷ்ணுவுக்கு நான் உத்தம யோகத்தைக் கூறினேன். அவர் சூரியனுக்கும் அவர் மனுவுக்கும் கூறினுர். அது வெகு காலமானதால் கலியில் நஷ்டமாகிவிட்டது. அதை நான் உனக்குக் கூறினேன்.

**வரேண்யன் :** இப்பொழுது அவதரித்த தாங்கள் ச்ருஷ்டியின் ஆதியில் விஷ்ணுவுக்கு எப்படிக் கூறினீர்?

**கஜானனர் :–** வரேண்யா! உனக்கும் எனக்கும் அனேக ஜன்மாக்கள் சென்றன. அவைகளை நீ யறியாய். நானறிவேன். என்னிட மிருந்தே ஸகல தேவர்களும் சராசரங்களும் உண்டாயின. தர்மம் குறைந்து அதர்மம்

அதிகமாகும் பொழுது ஸாதுக்களையும் வர்ணாச்ரமத்தை யும் காக்க நான் பூமியில் அவதரிப்பேன். ஜனன மரண மில்லாத நான் பிறப்பதின் உண்மையை அறிந்தவர் உல கில் மறுபடி தோன்றார். வைராக்யமுள்ள பலர் க்ஞானத் தாலும் தபஸ்ஸினாலும் என்னை யடைகிறார்கள். யார் யார் எப்படி யெப்படி என்னை உபாஸிக்கின்றார்களோ அப்படி அப்படியே பலனைப் பெறுகிறார்கள். சீக்கிரமாக பலத் தைப்பெற இதர தேவதைகளை உபாஸிக்கின்றார்கள். அவரவர்கள் குண கர்மாவுக்கேற்றபடி வர்ணாச்ரமங்களைப் படைத்தேன். நான் கர்த்தாவானாலும் உண்மையில் கர்த்தாவல்ல. கர்மவிஷயத்தில் க்ஞானிகளும் மோகத்தை அடைவார்கள். கர்மாபோல் தோன்றும் சிலவை அகர்மா வாகும். அகர்மா போல் உள்ள சிலவை கர்மாவாகும்.

பலத்தில் ஆசையை விட்டு நான் என்ற பாவனையும் விட்டு செய்யும் கர்மா அகர்மா வாகும். வெளி கர்மாக் களைவிட்டு விஷய வாஸனையுடன் மனதால் வியாபாரம் செய்வதும் கர்மாவாகும். என் ஆக்ஞையினால் எனக் காகச் செய்யப்படும் கர்மா க்ஞானத்தையே தரும். சிலர் ப்ரஹ்ம யக்ஞமும் சிலர் ஞானயக்ஞமும் சிலர் இந்த்ரியங் களை அடக்கும் யக்ஞமும் செய்வார்கள். எல்லாவற்றை யும்விட க்ஞான யக்ஞமே சிறந்தது. ஸத்ஸங்கத்தினால் க்ஞானமுண்டாவதுடன் ஆபத்துகளும் அழியும். க்ஞானம் ஆகாமி ஸஞ்சிதமென்ற இருவகை பாபங்களையுமகற்றும். இந்த்ரியங்களை ஜயித்த பக்திமான் விரைவில் க்ஞானத் தையும் முக்தியையும் அடைகிறான். பக்தியில்லாமலும் சிரத்தையில்லாமலும் எதிலும் சந்தேஹமுள்ளவனுமான மனிதன் க்ஷேமத்தை யடையமாட்டான். க்ஞானமெனும் கத்தியினால் விக்ஞானத்தையும் ஸம்ஸயத்தையும் அறுப் பவன் யோகயுக்தனாக இருப்பான்.

## 4. த்வைத ஸங்யாஸ யோகம்.

கர்ம ஸங்யாஸம் கர்மயோகம் இரண்டுகளில் எனக்கு ஸ்ரேயஸ்ஸைத் தருவது எது என வேந்தன் கேழ்க்க விநயகர் கூறினார்:— இரண்டும் முக்தி ஸாதனம். ஆயி னும் சுக துக்கம் முதலியவைகளைப் பொருத்து ஒன்றிலும் பற்றில்லாமல் செய்யும் கர்மா சிறந்தது. இவ்விரண்டு மொன்றே. அறியாதவர்களே வெவ்வேறாகக் கூறுவர்.

கர்மாக்களை விடுவது மாத்திரம் ஸன்யாஸமில்லை. இச்சையில்லாமல் செய்யும் கர்மயோகி க்ஞானியாவான். நிர்மலமான ஆத்மா எங்குமிருக்கின்றது என எண்ணி கர்மாவைச் செய்பவன், நான் செய்கிறேன் என நினையான். செய்யும் கர்மாக்களை ப்ரஹ்மார்ப்பணம் செய்வான். ஆசைகளை விட்டுச் செய்யும் கர்மா க்ஞானத்தைத் தருவதுபோல் பல விருப்பத்தோடு செய்யும் கர்மா பந்தத்தைத் தரும். நான் எவருக்கும் புண்ணிய, பாப, பலமான ஸுக துக்கங்களைத் தருவதில்லை. யாருக்கு க்ஞானமழிகிறதோ அவருக்கே நான் சூரியனைப்போல் ப்ரகாசிக்கிறேன். ஸதா என்னையே நினைக்கும் பக்தர் மறு பிறவி அடைவதில்லை.

க்ஞானிகள், நாயினிடமும் பசுவினிடமும் யானையினிடமும் மற்றெங்கும் என்னைக் காண்கின்றனர். அதனுல் அவர்களுக்கு நன்மை தீமை உண்டாவதில்லை. விஷயங்களால் உண்டாகும் ஸுகமும் ஸ்வர்காதி லோக சுகமும் அழியக் கூடியது. எனவே அவைகளில் பற்றுள்ளவன் தத்துவமறிந்தவனல்ல. காமக்ரோதாதிகளை ஜயிப்பவனே சுகம் பெறுவான். பன்னிரண்டு மாத்ராகாலம் மூச்சை யடக்குவது ஒரு ''லகு ப்ராணுயாமம்.'' இருபந்திநான்கு மாத்ரா காலம் மூச்சை யடக்குவது ''மத்யமம்.'' முப்பத்தாறு மாத்ரை காலம் மூச்சையடக்கி ப்ராணுயாமம் செய்வது ''உத்தமமாம்.'' புலி சிம்ஹம் மதம் பிடித்த யானை முதலியவைகளை அடக்குவது போல ப்ராணுபானங்களை யடக்கினுல் அவை ஸகல பாபங்களையு மகற்றும். படிக்கட்டில் ஏறுவது போல் சிறிது சிறிதாக ப்ராணுயாமம் செய்யவேண்டும். பூரகம் கும்பகம் ரேசகம் ஆகியவைகளை அப்யாஸம் செய்தால் சென்றது நடப்பது வரப்போவது ஆகிய முக்கால விஷயங்களையும் உணரலாம். பன்னிரண்டு உத்தம ப்ராணுயாமம் செய்தால் அது ஓர் ''தாரணை'' யாகும். இரண்டு தாரணைகள் ''யோகமாகும்.'' இங்ஙனம் யோகம் செய்பவருக்கு முவ்வுலகமும் வஶ்யமாகும். இந்த யோகமும் ஸன்யாஸமும் ஸமமானது. ப்ராணிகளுக்கு ஹிதம் செய்பவனும் கர்மபலத்தை அளிப்பவனும் முவ்வுலகத்திற்கு மதிபனும் விபுவாயுமுள்ள என்னை அறிந்தவன் ''முக்தனுவான்.''

ஓம்: தத்: ஸத்:

சித்த மருந்துகளில்  நிறைந்த சாதனைகள்!

# நல்வாழ்வுப் பணி

## " சித்த மருத்துவத்தின் சிறப்பு "

சித்தர்களின்

அளவிலாப் பெருமைக்குச் சிறந்த அத்தாக்ஷி

K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரியின்

## "மேல்மாயில் மருந்து"

தீராத நாட்பட்ட சரும ரோகங்களுக்கு சிறந்த நிவாரணி.

............ முழு விவரங்கட்கு எழுதுங்கள் ............

சித்தர் டாக்டர்

K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரி & சன்ஸ்,

5/22 மேல்மாயில் P. O., N. A. DT.

